# பொருளடக்கம்

## பொருளடக்கம்





# அருள்மிகு வைத்தியநாத சுவாமி திருக்கோயில்

### திருமழபாடி அரியலூா் வட்டம் மற்றும் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வைத்தியநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு சுந்தராம்பிகை, அருள்மிகு பாலாம்பிகை |
| தீா்த்தம் | இலக்குமி தீா்த்தம், சிவகங்கை தீா்த்தம் |
| தலவிருட்சம் | பனைமரம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### தலச்சிறப்பு

ஊருக்கு கிழக்கில் கொள்ளிட நதிக்கரையில் அமைந்துள்ளது. இயற்கையழகு பொருந்தியதாகவும் சோலைகள் சூழந்ததாயும் உள்ளது. மூா்த்தி, தலம், தீா்த்தம் என்ற மூன்றாலும் சிறப்புடையது. கொல்லி மலையை தலைமையிடமாக கொண்ட ஆட்சி செலுத்திய மழவ மன்னா்களின் பாடி இடமாக இருந்த இடம். மாா்கண்டேயருக்கு வடிவுடை மழுவேந்தி நடனக்காட்சி அருளிய தலம், இலட்சுமி, சந்திரன் இவா்களின் நோய் நீங்கப் பெற்ற தலம். கொள்ளிட நதி இத்திருக்ககோயில் முன்பு வடக்கு நோக்கி உத்தரவாகினியாகச் செல்வதால் காசியினும் சிறப்புடையாதாக கருதப்படுகிறது. தவம் செய்வோருக்கு தக்க இடம். ஸ்ரீநந்தியெம்பெருமானுக்கும் சுயசாம்பிகைக்கும் திருமணம் நடைபெற்ற சிறப்பு வாய்ந்த தலம் இது ஆகும். நிறைந்த கல்வெட்டுக்கள் உடையது. மூலவா் சுவாமி (இலிங்கத் திருமேனி) புருஷாமிருக முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பெற்றது. இத்திருக்கோயிலில் நவக்கிரகங்கள் இல்லை. அதற்கு பதிலாக சுவாமி சன்னதி முன் உள்ள மூன்று குழிகளில் தீபம் ஏற்றி வழிபட நவக்கிரக தோஷங்கள் அனைத்தும் நீங்கும். சிபி சக்கரவா்த்திற்கு நவக்கிரக தோஷங்கள் நீங்கிய இடம். நான்கு திசைகளிலும் காவல் தெய்வமாக அய்யனாா் உள்ளது. இவ்வூரில் உள்ள பிடாாி அம்மன் திருக்கோயிலுக்கு விழாக்காலங்களில் இத்திருக்கோயிலில் இருந்து உற்சவா் திருமேனி எடுத்துச் செல்லப்படுகிறது.

**இலக்கியச் சிறப்பு**

தேவார ஆசிரியர் மூவராலும் பாடல் பாடப்பெற்ற பெருமை உடையது. திருமழபாடி. திருவாலம் பொழில் எனும் தலத்தில் சுந்தரரின் கனவில் இத்தல சிவபெருமான் மழபாடியை நினைக்க மறந்தனையோ என நினைவூட்டிய திருத்தலம்.

மழபாடி பெருமானின் மாண்புகள் மழபாடி தேவார பாடல்களில் மிகுந்து மிளர்கின்றன. “மழபாடி எம்கோன் மிகுந்து மிளர்கின்றன”. “மழமாடி எம்கோனை நாள்தோறும் கும்பிடவே குறி கூடுமே, மழபாடியை தம் கையால் தொழுவார் தகவாளரே, மழபாடியை தலையினால் வணங்க தவம் ஆகுமே”என திருஞான சம்பந்தரும் மழபாடி மன்றும் மணாளன் என்றும், மழபாடி வைரத்தூகண் என அப்பரும் மழபாடியுள் மாணிக்கமே என சுந்தரரும் இத்தல இறைவனை போற்றி வழிபட்டுள்ளனர்.

நந்தியெம்பெருமாள் சுயசாம்பிகையை மணம் புரிந்த தலமாகையால் திருமணதடை நிவர்த்தி தலம். இலக்குமிக்கும், சந்திரனுக்கும் ஏற்பட்ட நோய்களை தீர்த்தருளியதால் இத்தலம் ஒரு சர்வ ரோக பரிகாரத்தலமாகும்.

**வரலாற்றுச் சிறப்பு**

இன்றைக்கு 3000 ஆண்டுகளுக்கு முன் நிலவிய சதங்க காலத்தில் இப் பகுதியில் வாழ்ந்த மழவர என்னும் வீரக்குடியினரின் படைப்பாசறை (பாழ) யாக விளங்கியதால் இவ்வூருக்கு மழவர்பாடி என்ற பெயர் ஏற்பட்டது. பிறகு சைவசமய சிறப்புக்கருதி திரு என்னும் அடைமொழியுடன் திருமழபாடி என்ற பெயர் ஏற்பட்டது.

அருள்மிகு சுந்தராம்பிகை உடனாய அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயில் வரலாறு பழமையும் புராணச் சிறப்பும், உடைய பெருங்கோயிலாகும். பல்லவ மன்னனாக விளங்கிய சிம்மவர்மன் ( 54D- 55B ) என்பவர் அரச பதவியை துறந்து சைவ சமய துறவியாகிய ஐயடிகள் காடவர கோன் என்னும் பெயருடன் பல சிவத்தலங்களை வணங்கி க்ஷேத்திர வெண்பாவில் பாடியுள்ளார்.

மகேந்திர வர்மன் (598 - 630) நரசிம்மவர்மன் (630 - 670) ஆகிய பல்லவ மன்னர்கள் காலத்தில் வாழ்ந்த அப்பர், சம்பந்தர் ஆகியோராலும் இக்கோயில் பாடல் பெற்றுள்ளது. சுந்தரின் தீந்தமிழை கேட்டதற்கென்றே அவரை வரவழைத்து பொன்னார் மேனியனே என்னும் அற்புத பதிகம் பாடச்செய்தது.

*பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து*
*மின்னார் செஞ்சடையமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே*
*மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே*
*அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே!*

இவ்விலக்கியச் சான்றுகள் மூலம் கி.பி 6 ஆம் நூற்றாண்டில் பல்லவர் காலத்திலேயே இவ்வூரும் கோயிலும் பெரும்புகழுடன் விளங்கியதென அறியலாம்.



பல்லவர் காலத்தில் இருந்த செங்கற் கோயில் கி.பி. 894 ல் முதலாம் ஆதித்த சோழர் காலத்தில் கற்கோயிலாகக் கட்டப்பெற்றது.

காலப்போக்கில் பழுதடைந்து போன இக்கோயிலை புதுப்பித்துக் கட்டுமாறு 1013 - ல் மாமன்னன் இராஜராஜன் கட்டளையிட்டான். இப்பணி 1026 - ல் அவர் மகன் முதலாம் இராஜேந்திரன் காலத்தில் நிறைவுற்றது. இப்போதுள்ள கருவறை, அர்த்தமண்டபம், இரண்டு அடுக்கு திருச்சுற்று நடைமாளிகை மதில்சுவர், கோபுர வாயில் ஆகியன முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில் கட்டப்பட்டவையாகும்.

இரண்டாம் திருச்சுற்று கோபுரம் மடப்பள்ளி உள்ளிட்ட கட்டிடப்பகுதிகள் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் கட்டப்பட்டவையாகும். போசலா மன்னன் வீரசிம்மனின் படைத்தளபதி வல்ல தண்ட நாயக்க என்பவர் இக்கோயில் விமானத்தை 1236-ல் புதிப்பித்துக் கட்டியதுடன் அலுவலக மண்டபத்தையும் கட்டியுள்ளார். அருள்மிகு சுந்தராம்பிகை அம்மன் சன்னதி மூன்றாம் குலோத்துங்க காலத்திலும், இக்கோயில் நடராஜர் சன்னதி மூன்றாம் இராஜராஜன் காலத்திலும் கட்டப்படடுள்ளன.அலுவலக மண்டபத்தை இணைத்து வடக்கில் கட்டப்பட்டுள்ள மண்டபம் 1490 - ல் கோனேரிராயன் என்னும் சிற்றரசரால் கட்டப்பட்டது, இத்திருக்கோயிலில் 30 கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டு தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதியில் இடம் பெற்றுள்ளது.

**சிற்பச்சிறப்பு**

இத்திருக்கோயிலில் உள்ள சேமாஸ்கந்தர் வடிவம் ஒரே கல்லினால் ஆன சிறப்புடையது. கல்யாண சுந்தரர், அகோர வீர பத்திரர், கஜசம்ஹறமூர்த்தி, சுந்தர கணபதி, பாலாம்பிகை சுந்தராம்பிகை, துர்க்கை, கார்த்யாயினி ஆகிய திருவுருவங்கள் மிகவும் பழமையானது தட்சிணாமூர்த்திக்கு ஆழகிய இருசிற்பங்கள் உள்ளன. ஒன்றின் பக்கத்தில் ரிஷப வடிவம் சேர்க்கபபட்டுள்ளது. முன்புறம் உள்ள அலங்கார மண்டபத்தில் நரசிம்ம பல்லவ அரசரை நினைவுப்படுத்தும் வகையில் சிங்கத் தூண்கள் அமைக்கப்பட்டுள்ளது. மழுவாடீஸ்வரர் சிறப்புடையது. மாதொருபாகர் திருவுருவத்தில் வலதுபாகம் உமைக்கு வழங்கப்பட்டுள்ளது.

**தனிச்சிறப்பு**

**நந்தியெம்பெருமான் – சுயசாம்பிகை திருக்கல்யாணம்**

தஞ்சை மாவட்டம், திருவையாற்றை அடுத்த அந்தணர்புரம் எனும் தலத்தில் வாழ்ந்த சிலாத முனிவர் என்பவர் தமக்கு புத்திபேறு இன்மையால் அய்யாறப்பரை பூசித்து தவம் செய்து வேண்டினார். ஐயாறப்பர் சிலாத முனிவருக்கு புத்திரபேறு அளிக்க திருவுளம் கொண்டு சிலாதனே. நீ புத்திரகாமேட்டி யாகம் செய்து பூமியை உழும்போது ஒரு பெட்டகம் தோன்றும். அதில ஒரு புத்திரன் காணப்படுவான். அவனுக்கு வயது பதினாறு அவனை நீ எடுத்துக்கொள்வாயாக என அருளினார். அவ்வாறே சிலாதர் யாகம் செய்து நிறைவில் பூமியில் இருந்து ஒரு பெட்டகத்தையம் பெட்டகத்துள் நான்கு தோள்களும் மூன்று கண்களும் சந்திரன் அளித்த முடியும்



கொண்ட அதிசிய மூர்த்தியைக் கண்டார். அசரீரியால் "பெட்டியை மூடித்திற" என உணர்த்திட அவ்வண்ணம் பெட்டியை மூடித் திறந்ததும். முன்னை வடிவம் நீங்கி அழகிய குழந்தை வடிவில் திகழ்ந்தது. பெற்றோர் அக்குழந்தைக்கு செப்பேசன் என பெயரிட்டு 14 ஆண்டுகளில் வேத சாஸ்திரம் உள்ளிட்ட அனைத்து கலைகளிலும் தேர்ச்சியுறச் செய்தனர்.

அறிவுடைய இம்மகனை 2 ஆண்டுகளில் இழக்க நேருமே என்ற பெற்றோரின் ஏக்கத்தை உணர்ந்த செப்பேசர் திருவையாறு திருக்கோயில் அயரை தீர்த்தத்தில் காலையூன்றி கடும் தவம் மேற்கொண்டார்.

செப்பேசரின் கடும் தவத்தில் இறைவன் ஒளி வந்து காட்சி கொடுத்து பதினாறு பேறுகளையும் வேண்டும் வரங்களையும் நல்கி சிவகணங்களின் தலைமைப்பதவி அளித்து நந்திகேஸ்வரர் என்ற நாமம் கொடுத்து அருளினார். பின்னர் சிலாத முனிவர், இறைவன் திருவுளப் பாங்கின் வண்ணம் திருமழபாடியில் ஆசிரமம் அமைத்து தவமும் அறமும் செய்து வந்த வசிட்ட முனிவரின் பெயர்த்தியும் வியாக்ரபாத முனிவரின் மகளும் உபமன்யு முனிவரின் தங்கையுமான சுயசாம்பிகையை பங்குனி புனர்பூச நாளில் திருமணம் செய்வித்தருளினார்.

இந்த அருள் வரலாற்றைக் கொண்டாடும் வகையில் ஆண்டுந்தோறும் பங்குனி புனர்பூச நாளன்று திருவையாறு அறம் வளர்த்த நாயகி சமேத அய்யாறப்பர் திருமழபாடி சுந்தராம்பிகை சமேத வைத்தியநாதர் திருமுன்பு இவ்விழா வெகு விமரிசையாக நடைபெற்று வருகிறது. இவ்வைபவத்தை காண்போரின் திருமணத் தடை நீங்கி விரைவில் திருமணம் பேறுபெற்று வருகின்றனர்.

இதனாலேயே நந்தி கல்யாணம் கணடால் முந்தி கல்யாணம் என்ற பழமொழி ஏற்பட்டுள்ளது.

### இதரச்சிறப்புகள்

இத்திருக்கோயில் புருஷாமிருகர், மார்க்கண்டேயர் திருமால், இலக்குமி, துர்கை, காளி, சூரியன், சந்திரன், அக்கினி,அசுவினி தேவர்கள் அகத்தியர், பராசரர், வசிட்டர் பீமன் முதலானோரால் வழிபடப் பெற்றது. தேவாரம் அருகிய மூவரும் இத்தலத்து இறைவனை பாடி பரவியதை சேக்கிழார் ஏற்றியும் போற்றியும் சிறப்பித்து உள்ளார்.



இத்தலம் நந்தியெம்பெருமான் திருமணம் புரிந்த திருமணத்தலம். இத்தலத்தில் இறைவனை வழிபடு அன்பர்களின் திருமணத்தடைகள்யாவும் நீங்கி திருமணப் பேறு பெறுவர் என்பது கண்கூடாக நடைபெற்று வருகிறது.

இத்தலத்தில் இலக்குமி, சந்திரனுக்கு உள்ள நோய்கள் நீங்கி நிவர்த்தி பெற்றமையால் இறைவன் வைத்தியநாதர் என விளங்குகின்றார். எனவே, நோய் தீர்க்கும் இப்பெருமானை வழிபடும் அன்பர்களின் உள, உடல் உறுபிணிகள் அனைத்தும் நீங்கி வாழ்வில் வளமும் நலமும் பெறுவர் என்பது உறுதி.

நடைதிறக்கும் நேரம்
காலை 7.00 மணிமுதல் பகல் 12.30 மணி வரை
மாலை 4.00 மணி முதல் இரவு 7.30 மணி வரை

### பூஜைகாலங்கள்

இத்திருக்கோயிலில் தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 9.00 மணி |
| உச்சிகாலம் | பகல் 12.00 மணி |
| சாயரட்சை | மாலை 5.00 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 7.00 மணி |

### அமைவிடம்

இத்திருக்கோயில் புள்ளம்பாடிக்கு தென் கிழக்கில் 20 கி.மீ திருவையாற்றுக்கு வடமேற்கில் 15 கி.மீ. தொலைவிலும் அரியலூருக்கு தெற்கில் 28 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

### வழித்தடம்

இவ்வூருக்கு திருச்சி, இலால்குடி, அரியலூர், திருமானூர் மற்றும் தஞ்சையில் இருந்து பேருந்து வசதிகள் உள்ளன. திருச்சி – விழுப்புரம் புகை வண்டி மார்க்கத்தில் அரியாலூர் (ம) புள்ளம்பாடி நிலையங்களில் இருந்து வரலாம்.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு வைத்தியசுவாமி திருக்கோயில்**
திருமழபாடி, அரியலூர் வட்டம் (ம) மாவட்டம் – 621 851
மின்னஞ்சல் முகவரி : manieo1973@gmail.com
அலைபேசி எண் : 9943530122

**பஞ்ச வில்வங்கள்**
●வில்வம் ●கிளுவை ●மாவிலங்கை● விளா● நொச்சி



# அருள்மிகு ஆலந்துறையார் திருக்கோயில்

கீழப்பழூவூர்,அரியலூர் வட்டம் மற்றும் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஆலந்துறையார் (வடமூலநாதர்) |
| இறைவி | அருள்மிகு அருந்தவ நாயகி |
| தீர்த்தம் | பிரம்ம, பரசுராம தீர்த்தங்கள் |
| தலவிருட்சம் | ஆலமரம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**தலச் சிறப்பு**

இத்தல சிவனுக்கு சாம்பிராணி தைலம் பூசப்படுகிறது. சுயம்பு வடிவிலான இலிங்கம் மிகச்சிறியது என்பதால் அடையாளம் காட்ட அதன் மீது ஒரு குவளை கவிழ்த்தப்பட்டு இருக்கிறது. இந்த குவளைக்கு அபிஷேகம் நடக்கிறது. பரசுராமர் தன் தாய் ரேணுகா தேவியை கொன்ற பாவம் நீங்க வழிபட்ட தலமாக இது கருதப்படுகிறது. அவர் உருவாக்கிய குளம் பரசுராம தீர்த்தம் எனப்படுகிறது. சில சிவன்கோவில்களை மூலவர் சன்னதியின் நுழைவு வாயிலின் மேற்பகுதியில் கஜலட்சுமி சிற்பம் அமைக்கபட்டு இருக்கும் ஆனால் இத்தலத்தில் பரசுராமர் சயனத்தில் இருப்பது போன்ற சிற்பம் அமைக்கப்பட்டு இருக்கிறது. இதன்மூலம் இத்தலம் பரசுராமருக்கு பாபவிமோட்சனம் போக்கிய தலம் என்பது அறிய முடிகிறது.

**வரலாற்றுச் சிறப்பு**

சோழ மன்னர்களின் ஆட்சியின் போது கட்டப்பட்பதாக அறியப்படும் இத் திருக்கோயிலானது முதலாம் பராந்தகச் சோழன் காலத்தில் இங்கு திருப்பணி நடந்துள்ள விபரங்களும், இதர சோழர் கால செய்திகளும் இத்திருக்கோயிலை சுற்றியுள்ள சுவர்களில் செய்திகளாக விடிக்கப்பட்டுள்ள விபரங்களை இன்றளவும் கல்வெட்டுகளால் காணமுடிவதால் இத்தலம் சோழா கால வரலாற்றோடு பின்னிப் பிணைந்துள்ளது என்பதை அறிய முடிகிறது. மேலும் சோழர்



பரம்பரையைச் சேர்ந்த செம்பியன் மாதேவியார் இத்திருக்கோயில் வழிபாட்டிலும் வளர்ச்சியிலும் மிகுந்த அக்கரைக்காட்டிய நிலையை வரலாற்று அறிஞர்கள் மூலம் அறிய முடிவதால் இத்திருக்கோயிலுக்கும் சோழப் பேரரசுக்கும் உள்ள வரலாற்றுத் தொடர்புகள் தெள்ளத்தெளிவாக தெரிவதுடன் இத்திருக்கோயிலின் பழமையையும், சோழர் காலத்தோடு தொடர்புடைய பழமையையும் அறியமுடிகிறது.

**சிற்பச்சிறப்பு**

இத்திருக்கோயிலின் மகா மண்டபம் மற்றும் அர்த்த மண்டப தூண்களிலும் சோழர் கால புடைப்புச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவை இன்றளவும், பேணி பாதுகாக்கப்பட்டு வருவதுடன் அதன் எழிலார்ந்த சிற்ப வேலைகளும் சித்திர வேலைகளும் கண்கவர் நிலையில் அமைக்கப்பட்டுள்ளன. மேலும் இத்தலத்தின் இறைவியான அருந்தவ நாயகி எம்பெருமான் ஆலந்துறையாரை நோக்கி ஊசி முனையில் தவமிருக்கும் தவக்கோலத்தை சிற்பமாக செதுக்கி அச்சிற்பமானது மூலவருக்கு அருகிலேயே அமைக்கப்பட்டுள்ள நிலையை இன்னும் காணலாம். அதில் உள்ள சிற்ப கலை நுணுக்கமும், இறைவனை நோக்கி கடுந்தவம் புரியும் நிகழ்வையும் காணும் பொழுது இத்திருக்கோயிலின் தெய்வ நிலைக்கும் சிற்ப சிறப்புகளுக்கும் இது ஒன்றே சான்றாக உள்ளதை அறிய முடிகிறது.

**இலக்கியச் சிறப்பு**

திருஞானசம்மந்தரின் தேவார பாடல் பெற்ற திருத்தலமாகும். வள்ளலார், விண்ணப்ப கவி வெண்பாவில் "கற்கருணை வாய்க்கும் மூர் மரகதமே"என்று சிவனையும், அருணகிரிநாதர் திருப்புகழில் இத்தலத்து முருகனையும் புகழ்ந்து பாடியுள்ள நிலையின் மூலம் இத்திருக்கோயிலின் வரலாற்றோடும் இலக்கியத் -தோடும் தமிழில் சிறந்தோங்கிய நிலையிலும், அதற்கு இறைவனும் முருகப்பெருமானும் அருளாட்சி செய்து அப்பெருமகனார்களை ஈர்த்த நிலையும் அறியும் பொழுது அவர்கள் இத்திருக்கோயில்பால் ஏற்படுத்திக் கொண்ட பக்திச் சிறப்பு நிலைகளை மிகச் தெளிவாக தெளிவாக அறிய முடிகிறது. மேலும் அதன் பின்னர் வந்த அருளாளர்கள் பலர் இத்திருக்கோயிலின் பால் வசன கவிகளையும் பாடியுள்ளனர்.

**தனிச் சிறப்பு**

வருடம் தோறும் பங்குனி மாதம் 18 – ஆம் நாளில் சூரியன் தன் கதிர்களால் இத்தல இறைவனை வழிபாடு செய்யும் சிறப்பு பெற்றது இத்திருத்தலமாகும். மேலும் இத்திருக்கோயிலில் 63 நாயன்மார்களுக்கும் பஞ்சலோக செப்புத் திருமேனிகள் செய்யப்பட்டு வழிபாட்டில் உள்ளன. இது இத்திருக்கோயிலின் தனிச்சிறப்பாகும். இத்திருக்கோயிலின் சண்டிகேசுவரரின் பஞ்சலோக சிலையும் சிறப்பான நிலையில் அமைக்கப்பட்டுள்ளது.

## இதரச்சிறப்புகள்

இத்திருக்கோயிலில் பிரார்த்தனை செய்தால் பிரம்மஹத்தி தோஷம் நீங்கவும், பிரிந்த தம்பதியினர் ஒன்று சேரவும் இல்வாழ்க்கையில் ஒற்றுமை கூடவும், சிறப்புடைய தலமாக இது விளங்கி வருகிறது.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் தமிழ், ஆங்கில வருடப்பிறப்பு, கார்த்திகை தீபத் திருவிழா, மார்கழி திருவாதிரை, பங்குனி உத்திரப் பெருவிழாமற்றும் பிரதோஷ வழிபாடுகள் ஆகியவை மிகச்சிறப்பாக நடைபெறுகின்றன.

நடைதிறக்கும் நேரம்
காலை 6.00 மணிமுதல் பகல் 12.00 மணி வரை
மாலை 4.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை

## பூஜைகாலங்கள்

இத்திருக்கோயிலில் தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.30 மணி |
| உச்சிகாலம் | பகல் 12.00 மணி |
| சாயரட்சை | மாலை 6.30 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.00 மணி |

## அமைவிடம்

இத்திருக்கோயில் அரியலூரில் இருந்து 8 கி.மீ. தெற்கிலும் திருச்சியில் இருந்து 60 கி.மீ. தொலைவில் கிழச்சிலும், கடையேழு வள்ளல்களின் ஒருவரான வல்வில் ஆட்சிபுரிந்த வளம்மிக்க ஊரான கண்டிராதீர்த்தத்திற்கு வடக்கிலும் அமைந்துள்ளது.

## வழித்தடம்

அரியலூரிலிருந்தும், திருச்சியிலிருந்தும், பெரம்பலூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு ஆலந்துறையார் திருக்கோயில்**
கீழப்பழுவூர், அரியலூர் வட்டம் மற்றும் மாவட்டம்
அலைபேசி எண் : 98940 35312





# அருள்மிகு பிரகதீசுவரர் திருக்கோயில்

கங்கை கொண்ட சோழபுரம், உடையார் பாளையம் வட்டம், அரியாலூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு பிரகதீசுவரர் |
| இறைவி | அருள்மிகு பெரியநாயகி |
| தீர்த்தம் | சிம்ம கிணறு ( கங்கை தீர்த்தம்) |
| தலவிருட்சம் | புன்னை, வன்னிமரம் |
| ஆகமம் | நாக கர்ண ஆகமம் |

## தலச் சிறப்பு

தமிழகத்திலேயே மிகப்பெரிய லிங்கம் இங்குதான் உள்ளது. 13.5 அடி உயரமும், 60 அடி சுற்றளவும் கொண்டது. ஆவுடையாரைச் சுற்றி பலகை கட்டி அதன் மீது ஏறி நின்று அபிஷேகம் செய்யப்படுகிறது. ஒரே கல்லால் ஆன மூலவர் பிரகதீஷ்வரர் இங்கு பிரம்மாண்டமாக எழுந்தருள்பாலிக்கிறார். தஞ்சாவூரில் உள்ள இலிங்கம் ஆண் அம்சமாகவும், இங்குள்ள இலிங்கம் பெண் அம்சமாகவும் கருதப்படுகிறது. அம்பாள் பெரியநாயகி பிரம்மாண்டமாக 9.5 அடி உயரத்தில் நின்ற கோலத்தில் அருள் பாலிக்கிறார். நிமிர்ந்து பார்த்துதான் தரிசனம் செய்ய வேண்டும். இந்த அம்பாளின் பாதத்தில் ஸ்ரீ சக்கரம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இங்குள்ள நவக்கிரகம் ஒரே கல்லில் தாமரைப்பூ வடிவில் மிகப் சிறப்பாக அமைக்கப்பட்டது. சூரியனுக்குரிய எந்திரவடிவில் எட்டு கிரகங்கள் சுற்றிலும் அமைக்கப்பட்டு ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் மேற்கு நோக்கி சூரியன் அமைந்துள்ளார்.இராஜேந்திர சோழனின் குலதெய்வமான துர்க்கை இங்கு 9 வயது சிறுமி வடிவில் சிரித்த முகத்துடன் 20 திருக்கரங்களுடன் மகிஷாசூரனை வதம் செய்த கோலத்தில் மங்களசாந்தி என்ற பெயரோடு எழுந்தருளியுள்ளார்.

## வரலாற்றுச் சிறப்பு

தஞ்சாவூர் பெரிய கோயிலை கட்டிய இராஜராஜ சோழனுக்கும், திரிபுவனமா -தேவிக்கும் மார்கழி திருவாதிரை அன்று பிறந்தவர் இராஜேந்திர சோழன். இயற் பெயர் மதுராந்தகன். இவரது ஆட்சிக்காலம் (கி.பி. 1012 முதல் 1044 வரை) கடல் கடந்து பல நாடுகளை வென்றவர்.

இவருக்கு கடாரம் கொண்டான், கங்கை கொண்ட சோழன், உத்தமசோழன், பண்டிதசோழன், விக்கிரமசோழன், முடிகொண்டசோழன், பஞ்சவன்மாறாயன், சோழேந்திரசிம்மன், என்ற சிறப்பு பெயர்களும் உண்டு. அத்தகைய பெருமை வாய்ந்த இராஜேந்திர சோழனால் கட்டப்பட்டதே இத்திருக்கோயில்.

இத்திருக்கோயில் கருவறை சுவர்களில் காணப்படும் கல்வெட்டுகள் 15 அடி. இவை பிரதி எடுக்கப்பட்டு கல்வெட்டு தொகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. இக் கல்வெட்டுகளின் மூலம் ராஜேந்திர சோழன், கொடை, கீர்த்தி புகழ் குறித்து குறிப்பிடப்பட்டுள்ள விபரங்களை அறிய முடிகிறது.

**சிற்பச்சிறப்பு**

மஹா மண்டபத்தின் வடகிழக்கு மூலையில் ஒரே பீ டத்தில் நவக்கிரஹங்கள் அமைந்துள்ளன. அருவுருவ நிலையில் தாமரைப்பூ வடிவில் தலைமை சிலை மேவிய சூரிய எந்திரம். நான்கு மூலைகளிலும் கந்தருவர், கின்னரர்கள், அதற்கு மேல் எட்டு கிரகங்களின் திருவுருவங்கள், இரண்டு சக்கரங்கள், பின் கால்களை ஊன்றி முன்கால்களை உயர்த்தி நிற்கும் ஏழு குதிரைகள், தேர் சாரதியான அரு ணன் இவை அனைத்தும் ஒரே பீடத்தில் அமைந்துள்ளன.

இந்த நவக்கிரஹ பீடத்திற்கு தோன்றாத் துணையாக அம் மகாமண்டபத்தின் மேற்கட்டில் பன்னிரு இராசிகளின் பழமையான சின்னங்கள் சிற்ப வடிவில் செதுக்கப்பட்டிருப்பது அனைவரும் காண வேண்டிய அரும்பெறும் சிற்ப அமைப்பாகும்.

இங்குள்ள நந்தி சுண்ணாம்பு கல்லால் செய்யப்பட்டு தரையில் அமர்ந்த பாங்கில் உள்ளது. இது மூலத்தானத்தில் இருந்து 200 மீட்டர் இடைவெளியில் உள்ளது. தினமும் பகலில் நந்தியின் மீது சூரிய ஒளிபட்டு, அந்த ஒளி கருவறையில் உள்ள இலிங்கத்தின் மீது பிரதிபலிப்பது மிகவும் சிறப்பு. மூலத்தானத்தில் விளக்குகளை அனைத்து விட்டு இருட்டில் இலிங்கத்தை பார்த்தால் மிகவும் அற்புதமாக இந்த ஒளி தெரியும் வகையில் வடிவமைத்துள்ள விதம் வியப்பைத் தருகிறது. இது நம் சிற்ப வல்லுநர்களின் கலைச்சிறப்புக்கு ஈடு, இணை ஏதுமில்லை என்பதை விளக்குவதாக உள்ளது.

**இலக்கியச் சிறப்பு**

கருவூர் சித்தர் பிரகதீஸ்வரர் மேல் பாடியுள்ள செய்யுள் மூலம் இத் திருக்கோயிலின் வரலாற்றோடும் இலக்கியத்தோடும் தமிழில் சிறந்தோங்கிய நிலையும், ஈர்த்த நிலையும் அறியும் பொழுது அவர் இத்திருக்கோயில்பால் ஏற்படுத்தி கொண்ட பக்திச் சிறப்பு நிலைகளை மிகத் தெளிவாக அறிய முடிகிறது. மேலும் அதன் பின்னர் வந்த அருளாளர்கள் பலர் இத்திருக்கோயிலின் பால் வசன கவிகளையும் பாடியுள்ளனர்.



**தனிச் சிறப்பு**

இத்திருக்கோயிலின் மகாமண்டபத்தை கடந்து அர்த்தமண்டபத்திற்கு வரும் பொழுது ஆங்கில “I” எழுத்து வடிவில் இரு வரிசைகளாலான எட்டு பெருந் தூண்களால் ஆன எட்டுகால் மண்டபம் உள்ளது. மண்டபதூண்களின் மேல்புறம் இருபக்கமும் 53 வகையில் பரத நாட்டிய அபிநய சிற்பங்கள் அழகாக செதுக்கப் பட்டுள்ளன. இம்மண்டபத்தில் காணப்படும் துவார பாலகர்களின் இருபுறமும் விநாயகர், சரஸ்வதி, உருவச்சிலைகளை காண்கிறோம். நடுவில் சிறிய நந்தியும், பலிபீடமும் காணப்படுகின்றன. முன்பு தட்சிண, உ த்திர கைலாய கோயில்களின் வெளிப்பிரகாரத்தில் இருந்த லிங்கமும் அம்மன் திருவுருவமும் இம்மண்டபத்தில் வைக்கப்பட்டுள்ளன.

இம் மண்டபத்தின் மேற்கு நோக்கிய சுவர் மீது உப்பு புடைப்புச்சிற்பங்கள் உயிர் துடிப்புடன் ஆறு வரிசைகளில் அமைந்துள்ளன. அவை 1. விஷ்ணு அனுக்கிரஹ மூர்த்தி, 2. மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கல்யாணம், 3. இராவணன் கைலை மலையை பெயர்த்தது, 4. மார்கண்டேயன் வரலாறு. 5. சண்டிகேசுவரர் வரலாறு, 6. தேவி அனுக்கரஹ மூர்த்தி. ஆகியவை அமையப்பட்டுள்ளது தனிச்சிறப்பாக உள்ளன.

கருவறையின் உள்ளே இலுப்பை மரங்களைக் கொண்டு சாலரம் கட்டப் பட்டுள்ளது. கருவறை சுவரை ஊடறுத்து மற்றொரு வெளிச் சுவற்றில் இந்த சாலரத்தை பொறுத்தி முன்னும், பின்னும் இழுத்து தள்ளக்கூடிய வகையில் அமைந்திருக்கும் சிறப்பை உண்ணாழிகையை சுற்றி வரும்போது கண்டறியலாம். கருவறையைச் சுற்றி காணப்படும் உண்ணாழி 10 அடி அகலம் உடையதாகும் கருவறைச் சுவற்றில் கிடைத்ததற்கரியதும், விலை மதிப்புள்ளதுமான ஒருவகை சந்திர காந்த கல்லை பதித்து வைத்திருப்பதால் தண்ணென்ற குளிர்ச்சி நிலவுகிறது. இது ஒருபுறமிருக்க பெருவுடையாரின் மீது ஒளியின் பிரதிபலிப்பு பகல் முழுவதும் பாவித்திருப்பது கவனிக்கத்தக்கதாகும். கிழக்கு பார்த்த சன்னதியில் சூரியன் தெற்கே சாய்ந்தாலும் பெருவுடையாரின் மீது படும் ஒளியின் ஊடுருலை சன்னதியில் நின்று தரிசனம் செய்யும் பொழுது கண்கூடாக காண்பதும், இக்கோயிலின் கட்டிட கலை அமைப்பில் காணப்படும் பொறியியல் அறிஞர்களின் தொழில்நுட்பத்திற்கு இது ஒரு சான்றாகும்.

அடுத்தபடியாக கருவறையின் மேல் இருந்த விமானத்தைக் காண மேல் தளத்திற்கு சென்றால் 35 அடி உயரத்திற்கு மேல் இரண்டு மேல் மாடிகளையும், அதற்கு மேல் மொட்டை மாடியுடன் கூடிய விமானத்தின் முன்புறம் ஒரு தனி அமைப்பாய் காணப்படுகிறது. முதல் மாடியின் நடுவில் உள்ள சிறு துவாரத்தின் வழியாக பார்த்தால் சுவாமியின் சிரசும் பாகத்தை காண முடியும். இரண்டாவது மாடிப்படியில் ஏறி விமான வாயிலில் நுழைந்து அன்னாார்ந்து பார்த்தால் விண்ணார்ந்த விமான கூறையில் போடப்பட்டுள்ள பிரம்மாண்ட தளக்கல்லின் வட்டமான அடிப்பகுதி கண்களுக்குப் புலனாகும். உள்ளீடில்லாத வெற்றுக்கூடாக

மேல் நோக்கி செல்ல, செல்ல கொஞ்சம் கொஞ்சமாக சிறுத்து காணப்படும் விமானத்தின் உட்பகுதியை காணும்போது வியப்பு மேலிடுகிறது.

தவிர இம்மாடியில் 10 அடிஅளவுடைய கருவறை சுவரும், 12 அடி அளவுடைய வெளிப்புற சுவரும் படிப்படியாக ஒன்றையொன்று 2 அடி இடைவெளியில் நெருங்கி ஓங்கி உயர்ந்து நிற்கும் விமானத்தின் பாத்திரத்தை வலிமையோடு தாங்கி நிற்பது சோழர் கால கட்டிடக் கலைக்கு தனிச்சிறப்புகளை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

இத்திருக்கோயிலின் கோபுரம் சோழர் கால கட்டிடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. தஞ்சாவூரைப் போலவே இங்கும் சிவ லிங்கத்தை பிரதிஷ்டை செய்தபின் கோபுரம் கட்டப்பட்டுள்ளது. 216 அடி உயரமுள்ள தஞ்சாவூர் கோபுரம் கீழிலிருந்து மேல ஒரே சீராக கட்டப்பட்டிருக்கும். ஆனால் 180 அடி உயரம், 100 அடி அகலம் உள்ள இத்திருக்கோயில் கோபுரம் கீழிலிருந்து 100 அடி உயரம் வரை அகலமாகவும், அதன்பின் 80 அடி உயரம் குருகலாகவும் கட்டப்பட்டுள்ளது.

தஞ்சாவூர் பெரிய கோவிலுக்கு அடுத்தபடியாக இத்திருக்கோயில் விமானம் தான் தமிழகத்தின் பெரிய விமானமாகும்.

### இதரச் சிறப்புகள்

அம்பாள் பெரியநாயகி (ஏ) பிருகுந்நாயகி 9 1/2 அடி உயரத்தில் ஈசனுக்கு இணையாக நின்று அருள்பாலிக்கிறார், கிழக்கு முக வாயிலில் தனி சன்னதி கொண்டுள்ள அம்பாளுக்கு காஞ்சி மகாப்பெரியவர் திருக்கரங்களால் ஸ்ரீசக்கரம் நிறுவப்பட்டுள்ளது. சக்தி சொரூபமாக வேண்டுவோர்க்கு வேண்டும் வரத்தை அன்னை அருளிவருகிறார்.

அம்பாளுக்கு அபிஷேகம் செய்து அலங்காரம் செய்து பார்க்கும்போது நேரில் நின்று பேசுவது போன்ற நிலையை அவரவர் உணர முடியும். தஞ்சாவூர் பெரிய கோயிலில் குடிகொண்டிருந்தும் கங்கை கொண்ட சோழபுரத்திலும் குடிகொண்டு அருள்பாலித்து வருகிறார்.

அருள்மிகு மகிஷசுரத்தனி அம்மன் இத்திருக்கோயிலில் தனி சன்னதியில் அருளாட்சி புரிகிறாள். அருள்மிகு மகஷசுரமர்த்தனி அம்மன் சாந்த சொரூபமாக குழந்தை முகத்துடன் 20 புஜங்களுடன் அருள்பாலித்து வருகிறாள். சாளுக்கிய நாட்டு கலை நயத்துடன் கட்டப்பட்டது.

மாமன்னன் இராஜேந்திரன் போருக்கு செல்லும் முன்னர் இந்த மகிஷாசுர -மர்த்தனியை வணங்கிவிட்டு செல்வது வழக்கமாக இருந்து வந்தது என்றும், போர் முடிந்து வெற்றியுடன் திரும்பியவுடன் தேவிக்கு சிறப்பு பூஜைகள் செய்வதும் வழக்கமாக இருந்தது என்றும் சான்றோர்கள் கூறுகின்றனர். மகிஷாசுரனை வதம் செய்ததனால் அம்பாளுக்கு மகிஷாசுரமர்த்தனி என்ற திருநாமம் வழங்கப்பட்டு வருகிறது.





மங்கல காரியங்கள் அனைத்தும் வெற்றி பெற அருள்பாலிப்பது அம்பாளின் தனிச்சிறப்பு ஆகும். செவ்வாய், வெள்ளி, ஞாயிற்றுக்கிழமை ராகு காலத்தில் தரிசனம் செய்வது மிக சிறப்பாகும். நினைத்த காரியம் ஜெயமாகும்.

### திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் மாதம் இருமுறை பிரதோஷமும், மாதத்தில் ஒரு முறை சங்கடஹர சதுர்த்தியும், மாதந்தோறும் பௌர்ணமி பூஜையும், பங்குனி மற்றும் ஆடி மாதங்களில் துர்க்கையம்மன் பால்குட அபிஷேக விழாவும் மிகச்சிறப்பாக நடைபெறுகின்றன.

இத் திருக்கோயிலில் ஐப்பசி பௌர்ணமி தினத்தில் மிகச் சிறப்பாக அன்னா அபிஷேகம் நடந்து வருகிறது. நூற்றுக்கணக்கான மூட்டை அரிசியை வேக வைத்து மூலவராக இருக்கும் அருள்மிகு பிரகதீஷ்வர இலிங்க திருமேனியை அரிசி சாதத்தினால் அபிஷேகம் செய்வார்கள்.

அன்றைய தினம் காலை 9.00 மணி முதல் மாலை 4.00 மணி வரை இந்த அன்னாபிஷேகம் தொடர்ந்து நடந்து கொண்டு இருக்கும். அத்துடன் காய்கறி, கனி வகைகள், பலகாரங்கள் ஆகியவை வைத்து நைவேத்தியம் செய்து சிறப்பு பூஜைகள் நடத்தப்படும். மாலை 6.00 மணிக்கு மகா தீபாரதனை நடைபெறும்.

ஐப்பசி பௌர்ணமி அன்று சிவலிங்கத்தின் மீதுள்ள ஒவ்வொரு அன்னமும் சிவலிங்கமாக மாறுவதாக ஐதீகம் உள்ளதால், அன்றைய தினம் அன்னா அபிஷேகத்தில் தரிசனம் செய்யும் போது பல லட்ச சிவலிங்கங்களை ஓரிடத்தில் தரிசனம் செய்த புண்ணியம் கிடைக்கும் என நம்பப்படுகிறது.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.00 மணிமுதல் பகல் 12.00 மணி வரை**
**மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை**



**பூஜை காலங்கள்**

இத்திருக்கோயிலில் தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 9.00 மணி |
| உச்சிகாலம் | பகல் 12.00 மணி |
| சாயரட்சை | மாலை 6.00 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.00 மணி |

இங்குள்ள சரஸ்வதி, லெட்சுமி ஆகிய இருவரும் தியானக் கோலத்தில் இருப்பதால் இவர்கள் ஞான சரஸ்வதி, ஞான லெட்சுமி என அழைக்கப்படுகிறார்கள்.

**அமைவிடம்**

இத் திருக்கோயில் சென்னையிலிருந்து 245 கிலோ மீட்டர் தொலைவிலும், கும்பகோணத்தில் இருந்து 34 கிலோ மீட்டர் தொலைவிலும், தஞ்சாவூரிலிருந்து 74 கி.மீ தொலைவிலும், திருச்சியிலிருந்து 102 கி.மீ தொலைவிலும் சிதம்பரத்தில் இருந்து 41 கி.மீ தொலைவிலும், திருச்சி – சிதம்பரம் சாலையில் அமைந்துள்ளது.

**வழித்தடம்**

கும்பகோணம், மயிலாடுதுறை, அரியலூர், சிதம்பரம், ஜெயங் கொண்டம், காட்டுமன்னார்கோயில் ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன.


தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

**அருள்மிகு பிரகதீஸ்வரர் திருக்கோயில்,**

கங்கைகொண்ட சோழபுரம்,

உடையார்பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம்.

அலைபேசி எண் : **98940 35312**



# அருள்மிகு சொர்ணாம்பிகை உடனுறை தீர்க்கபுரீசுவரர் திருக்கோயில்

சென்னிவனம், ஆரியலூர் வட்டம், மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு தீர்க்கபுரீசுவரர் |
| இறைவி | அருள்மிகு சொர்ணாம்பிகை அம்பாள் |
| தீர்த்தம் | அக்னிதீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**தலச் சிறப்பு**

இத்திருக்கோயில் 1186 ஆண்டுகள் பழமையுடைது என்ற விபரம் பராந்தக சோழரின் திருமழபாடி கல்வெட்டில் குறிப்பிடப்பட்டதின்படி அறியப்பட்டுள்ளது. அக்கல்வெட்டில் இவ்வூரை சென்னிவனம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. வரலாற்றுக்கு முந்திய காலத்தில் அவ்வூரில் கிடைக்கும் 3,000 ஆண்டுகள் பழமையடைய கற்கால முதுமக்கள் தாழிகள் மற்றும் கறுப்பு, சிவப்பு பானை ஓடுகள் மூலம் அறிவதால் இத்தலத்தின் பழமையும் அப்போதே இத்திருக்கோயில் வழிபாட்டில் இருந்த நிலைகளையும் அறியக்கூடிய சிறப்புகளைப் பெற்றதாக உள்ளது.

**வரலாற்றுச் சிறப்பு**

இவ்வூர் கோவிந்தப் புத்தூரிலுள்ள சிவன் கோவிலுக்கு தேவதானமாக இருந்தது என்பதை உத்தமச் சோழரின் கி.பி.984ம் ஆண்டு கல்வெட்டு தெரிவிக்கிறது. திருக்கோயிலுக்கு முதலாம் இராஜேந்திரன் மூன்றாம் ஆண்டு கல்வெட்டு உள்ளது. கி.பி.1015ல், எழுதப்பட்ட இக்கல்வெட்டு இவ்வூர் பெயரை சென்னிவனம் என்றும் கோயில் பெயரை திருச்சென்னி வலமுடைய மகாதேவர் திருக்கோயில் என்றும் குறிப்பிடுகிறது. அதனால் இத்திருக்கோயில் சோழ மன்னர் காலத்தில் இன்றைக்கு 996 ஆண்டுகளுக்கு முன்கட்டப்பெற்ற பழமையுடையது என்பதன் மூலம் இத்திருக்கோயில் சோழர்கால வரலாற்றுடன் தொடர்பு -டையதாகவும் அக்காலக்கட்டத்தில் சோழ மன்னர்கள் விரும்பி வழிபட்ட தலங்களில் இத்திருக்கோயிலும் ஒன்றாக இருந்தது என்பதும் தெளிவாகிறது.



**சிற்பச் சிறப்பு**

இத்திருக்கோயிலில் ஏராளமான சோழற்கால கற்சிற்பங்கள், இத்திருக்கோயிலின் மகா மண்டபத்தூண்களிலும் நுழைவுவாயில் தூண்களிலும் இருப்பதை இன்றும் காணப்பெறலாம். இதன் மூலம் இத்திருக்கோயிலின் பழமையான சிற்பச் சிறப்புகள் நன்கு புலப்படுகின்றன.

**இலக்கியச் சிறப்பு**

இத்திருக்கோயிலில் தமிழை பிரதானமாகக் கொண்டு அர்ச்சனை, ஆராதனைகள் செய்யப்பட்டுவருகின்றன. சமஸ்கிருத அர்ச்சனையும் செய்யப்பட்டு வந்தாலும் தமிழை முன்னிலைப்படுத்துவதால் தமிழ் மொழி வளர்ச்சிக்கு இத்திருக்கோயில் வாயிலாக மொழி வளம் காக்கப்படும் செயல்பாடு பேணப்படுகிறது.

**தனிச்சிறப்பு**

சோழர்காலத்தில் இவ்வூரை காரைக்காட்டு சென்னிவலக்கூற்றம் என்னும் நாட்டுப்பிரிவின் தலைநகராக இருந்துள்ளது என கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. காரைக்காட்டு சென்னிவலக்கூற்றத்தில் நெடுவாயில் என்றும் நெடுவாயிலான வீர சோழ நல்லூர் என்றும் இவ்வூரை கல்வெட்டுக்கள் குறிப்பிடுவதாலும் கி.பி. 1586 ல் எழுதப் பெற்ற விஜயநகரக் காலத்து செஞ்சி நாயக்கர், தொண்ட நாயக்கர் கல்வெட்டு காவேரிப்பாளையம் நாச்சிமுத்தேரிக்கரை மாரியம்மன் கோவில் அருகில் உள்ளது. இது தாமரைநத்தம், ஆந்தைப்பாடி, காவேரிப் பாளையம், காலிங்கராயன் கொல்லை ஆகிய எல்லைகளுக்கு நடுவில் இருந்த நிலங்களை சென்னியாண்ட தம்பிரானால் கோயில் திருப்பணிக்கு லிங்கராஜர் என்பவர் கொடுத்ததாக கூறுகிறது. இவ்வூருக்கு சென்னிவனம் பேட்டை என்னும் பெயர் இருந்ததை விஜயநகரகால செப்பேடுகள் கூறுகின்றன. இதன்மூலம் இத்திருக்கோயில் சோழ, விஜயநகர பேரரசுகளின் அபிமான தலமாக இருந்தது என்பது இத்திருக்கோயிலின் தனிச்சிறப்பாக உள்ளது.

**இதரச்சிறப்புகள்**

சோழர் கால மற்றும் விஜய நகரப் பேரரசுகளின் வரலாற்றுடன் தொடர்புடைய இத்திருக்கோயில் பிரார்த்தனை தலமாக விளங்கி வருகிறது. மக்கட்பேறு வேண்டுவோர் இத்திருத்தலத்தில் வேண்டுதல் வைத்தபின் அவை நிறை -வேறுவதை இன்றும் கண்கூடாக காணுவது தனிச்சிறப்பாக உள்ளது.

**திருவிழாக்கள்**

இத்திருக்கோயிலில் தமிழ் வருடப்பிறப்பு, கார்த்திகைதீபத்திருநாள், மார்கழி திருவாதிரை ஆகிய விழாக்கள் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன. மற்றும் தீபாவளி பண்டிகை,மகரசங்கராந்தி பொங்கல் பண்டிகை, பங்குனி உத்திரம் ஆகிய நாட்களில் சிறப்பு ஆராதனையும் அபிஷேகமும், பிரதோஷ வழிபாடுகளும் நடை பெறுகின்றன.

நடைதிறக்கும் நேரம்
காலை 7.30 மணிமுதல் பகல் 11.00 மணி வரை
மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

**பூஜைகாலங்கள்**

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.30 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.00 மணி |

**அமைவிடம்**

இத்திருக்கோயில் அரியலூரிலிருந்து செந்துறை செல்லும் சாலையில் 7 கி.மீ. தொலைவிலும், ஜெயங்கொண்டத்திலிருந்து அரியலூர் வழியாக 47 கி.மீ. தொலைவிலும், செந்துறையிலிருந்து 5 கி.மீ.தொலைவிலும், பெரம்பலூரிலிருந்து 37 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

**வழித்தடம்**

அரியலூரிலிருந்தும், செந்துறையிலிருந்தும், பெரம்பலூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு தீர்க்கபுரீஸ்வரர் திருக்கோயில்**
சென்னிவனம்,
அரியலூர் வட்டம் மற்றும் மாவட்டம்,



**சிவத்தலங்களில்**

| | |
|---|---|
| சிதம்பரத்தை | தரிசித்தாலும் |
| திருவண்ணாமலையே | நினைத்தாலும் |
| திருவாரூரில் | பிறந்தாலும் |
| காசில் | இறந்தாலும் |





# அருள்மிகு அமிர்தாம்பிகை உடனுறை ஜமதக்னீசுவரர் திருக்கோயில்

உடையவர் தீயனூர் கிராமம், உடையார்பாளையம் வட்டம்,
அரியலூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு ஜமதக்னீசுவரர் |
| இறைவி | அருள்மிகு அமிர்தாம்பிகை அம்பாள் |
| தீர்த்தம் | அக்னிதீர்த்தம் (பரசுராம நதி) |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**தலச் சிறப்பு**

இத்தலம் ஒரு காலத்தில் வில்வாரண்யம் என்று அழைக்கப் பட்டதாகவும், ஸப்தரிஷிகளில் ஒருவரான ஜமதக்னி ரிஷி இங்கு வந்து வில்வ மரத்தின் கீழ் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழிபட்டதாகவும், அதனால் இத்திருக்கோயில் அந்த ரிஷியின் பெயராலேயே பெயர் பெற்றதாக புராண வரலாறுள் தெரிவிப்பது இத்தலத்தின் சிறப்பாகும்.

**வரலாற்றுச் சிறப்பு**

இவ்வூருக்கு மனுகுலசேரிநல்லூர் என்ற பெயர் இருந்ததை (கி.பி.1044 வரை ) கங்கை கொண்ட சோழபுர கல்வெட்டால் முதலாம் ராஜாதிராஜன் கி.பி.101-1053ன் படி அறிய முடிகிறது. கி.பி.6ம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பர், சம்பந்தர், கி.பி.9ம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தர், ஆகியயோரால் பாடல் பெற்ற

சிறப்பை உடையது. தீயனூரைச் சுற்றி இருப்பதாலும், அகழ்வாராய்ச்சியில் பல்லவர் காலச்சிற்பங்கள், காசுகள் கிடைத்திருப்பதாலும் இத்திருக்கோயில் பல்லவர் காலத்திலேயே இருந்தது என்ற முடிவுக்கு வரமுடிகிறது. முதலாம் ராஜாதிராஜன் உடையவர் தீயனூருக்கு கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து மடத்திற்கு இரவலாக கொடுத்தது பற்றி கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள வீர இராஜேந்திரன் கல்வெட்டுக்கள் மூலம் தெரிய வருகிறது. இக்கல்வெட்டிலிருந்து ஜமதக்னீஸ்வரர் கோயில் 2ம் இராஜராஜ சோழன் காலத்தில் (கி.பி.1146 முதல் 1166) கட்டப்பெற்று பிற்கால சோழர்கால கலைப்பாணியிலான கட்டிடக் கூறுகளுடன் திகழ்வதால் இத்திருக்கோயில் சோழ மன்னர்கள் காலத்தில் கட்டப்பெற்றது என்கிற வரலாற்றுச் சிறப்புடன் திகழ்கிறது.

**சிற்பச் சிறப்பு**

இத்திருக்கோயிலில் ஏராளமான சேழர்கால கற்சிற்பங்கள், இத்திருக்கோயிலின் மகாமண்டபத் தூண்களிலும் நுழைவு வாயில் தூண்களிலும் இருப்பதை இன்றும் காணப்பெறலாம். இதன் மூலம் இத்திருக்கோயிலின் பழமையான சிற்பச்சிறப்புகள் நன்கு புலப்படுகின்றன.

**இலக்கியச் சிறப்பு**

இத்திருக்கோயிலில் தமிழை பிரதானமாகக் கொண்டு அர்ச்சனை, ஆராதனைகள் செய்யப்பட்டுவருகின்றன. சமஸ்கிருத அர்ச்சனையும் செய்யப் பட்டு வந்தாலும் தமிழை முன்னிலைப் படுத்துவதால் தமிழ் மொழி வளர்ச்சிக்கு இத்திருக்கோயில் வாயிலாக மொழி வளம் காக்கப்படும் செயல்பாடு பேணப்படுகிறது.

**தனிச்சிறப்பு**

இத்திருக்கோயில் மூலவர் ஜமதக்னீஸ்வரர் கருங்கல்லால் ஆன சதுர வடிவில் அமைந்த பலகை போன்ற பீடத்தின் மேல் சிவலிங்கத்திருமேனியாக அருட்காட்சி தருகிறார். மூலவர் அமிர்தாம்பிகை விமானம், விண்ணிலுள்ள வான் காத்த அலைகளை தன்னுள் உள்ளிழுக்கும் விதமாக கூம்பு வடிவத்தில் சிறப்புற அமைக்கப்பட்டுள்ளது. அம்பாளின் சிரசு அழகிய மகுடம் போல் அலங்கரிக்க இரண்டு காதுகளிலும் மகர, பத்ர குண்டங்களோடும், கழுத்தில் திருமாங்கல்யத்தோடும், கைகளில் வளையல், கால்களில் சலங்கை, மேல்வலது கையில் அட்சய மாலை, இடதுகையில் நீலோற்பல மலர் ஆகியவற்றுடன் வலக்கை அபய முத்திரையுடனும் இடக்கை தொடையில் ஊன்றியவாறும் காட்சியளிக்கிறார். இக்காட்சியுடன் கூடிய அம்பாளின் திருவுருவம் மற்ற திருக்கோயில்களில் அமைந்ததைவிட இத்திருக்கோயிலில் மங்களகரமாகவும்



அபய முத்திரையுடனும் காட்சியளிப்பதனால், இத்தலம் ஆண், பெண்களுக்கு உஷ்ணத்தால் ஏற்படும் வயிற்று வலி, கண் வலி,சூளை நோய் போன்றவைகளை நீக்கும் புண்ணிய தலமாகவும், நவகிரக தோஷங்கள், திருமணத்தடைகள், மகப் பேரின்மை போன்றவற்றை நீக்கும் தலமாகவும் விளங்குவது இத்திருக்கோயிலின் தனிச்சிறப்பாகும்.

**இதரச்சிறப்புகள்**

சோழர்கால மற்றும் பல்லவர் பேரரசுகளின் வரலாற்றுடன் தொடர்புடைய இத் திருக்கோயில் சிறந்த பிரார்த்தனை தலமாக விளங்கி வருகிறது. மக்கட்பேறு வேண்டுவோர் இத்திருத்தலத்தில் வேண்டுதல் வைத்தபின் அவை நிறைவேறுவதும், உஷ்ணத்தினால் ஏற்படும் கண்நோய் மற்றும் சூளை நோய் நீங்குவதும் தனிச்சிறப்பாக உள்ளன.

இத்திருக்கோயிலில் தமிழ் வருடப்பிறப்பு, நவராத்திரி விழா, கார்த்திகை தீபத் திருநாள், மார்கழி திருவாதிரை ஆகிய விழாக்கள் சிறப்பாக கொண்டாடப் படுகின்றன. தீபாவளி பண்டிகை, மகரசங்கராந்தி பொங்கல், பங்குனி உத்திரம், ஆகிய நாட்களில் சிறப்பு ஆராதனையும், அபிஷேகமும், பிரதோஷ வழிபாடுகளும் சிறப்பாக நடைபெறுகின்றன.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 7.30 மணிமுதல் பகல் 11.00 மணி வரை**
**மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை**

**பூஜாக்காலங்கள்**

இத்திருக்கோயிலில் தினமும் இரண்டு கால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.30 மணி |
| அர்த்தஜாமம் | இரவு 8.30 மணி |

**அமைவிடம்**

இத்திருக்கோயில் அரியலூரிலிருந்து ஸ்ரீபுரந்தான் செல்லும் பிரதான சாலையில் 20 கி.மீ. தொலைவிலும், ஜெயங்கொண்டத்திலிருந்து 30 கி.மீ. தொலைவிலும், விளாங்குடி,கைக்காட்டியிலிருந்து 6 கி.மீ தொலைவிலும், திருச்சியிலிருந்து 69 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

**வழித்தடம்**

அரியலூரிலிருந்தும் ஜெயங்கொண்டத்திலிருந்தும், திருச்சியிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

**அருள்மிகு ஜமதக்னீஸ்வரர் திருக்கோயில்**

உடையவர் தீயனூர் கிராமம்,

உடையார்பாளையம் வட்டம், அரியாலூர் மாவட்டம்



### திருமழபாடி பெருமானை வணங்குவோர் பெறும் பேறுகள்

**வரங்கொடுப்பவன் மாமழபாடியுள் வள்ளலே**

**மழபாடி இறைவனை தொழுபவர்கள் துயரானவை தீரும்**

**மழபாடியைத் தலையால் வணங்குவார் தவமுடையார் ஆவர்**

**மழபாடியை நினைந்து வழிபடுவார்க்கு புகழினைத்தரும்**

**மழபாடி ஈசனை நாடி வணங்கியவர்க்கு வறுமையில்லை**

**மழபாடி ஈசனை எண்ணுவர்க்கு வருகின்ற பிணி இல்லை**

**மழபாடி பெருமானை வழிபட மனம் திருந்தும்**

**மழபாடி பெருமானை வழிபடுவோர்க்கு வழித்துணையாக வருவார்**

**மழபாடி பெருமான் மாளா நாள் அருளுவார்**





# அருள்மிகு கழுமலைநாதசுவாமி திருக்கோயில்

ஜெயங்கொண்டம், உடையார்பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | **அருள்மிகு கழுமலைநாதர்** |
| இறைவி | **அருள்மிகு பெரியநாயகி** |
| தீர்த்தம் | **சிவகங்கை தீர்த்தம்** |
| தலவிருட்சம் | **நெல்லிமரம்** |
| ஆகமம் | **காமிக ஆகமம்** |

### தலச் சிறப்பு

பஞ்சலிங்கத்தலம் என்னும் சிறப்பினை உடையது இத்திருத்தலம் இவ்வூரில் நடுநாயகமாக இத்திருக்கோயிலும், இத்திருக்கோயில் வளாகத்திலேயே மேல்புறம் பழமலைநாதர் திருக்கோயிலும் இவ்வூரின் தென்மேற்கே ஆவீச்சரம் திருக்கோயிலும், வடக்கே சோழீஸ்வரர் திருக்கோயிலும் வடக்கிழக்கே சென்னீஸ்வரர் திருக்கோயிலும் அமைந்துள்ளது சிறப்பிற்கு உரியது ஆகும். இவ்வைந்து சிவாலயங்களை வழிபட்டு பஞ்சபூத தலங்களை வழிபட்டோர் பெறும் பலனை அடையலாம் என்பார்.

மலைநாட்டிலிருந்து வந்த வணிகன் ஒருவன் சோழநாட்டிலும் பிறநாட்டிலும் மிளகு பொதிகைளை மாடுகளின்மேல் ஏற்றிக் கொண்டு இவ்வூர் வழியாக விருத்தாச்சலத்திற்குச் சென்றான். அப்பொழுது வழியில் ஓர் சுங்கச் சாவடியிருந்தது. மிளகுக்கு அதிக வரி கொடுக்கவேண்டியிருந்ததால் வணிகன் அதிகாரிகளிடம் பொதிகளில் இருப்பது பயிறு என்று பொய் கூறி அதற்குரிய வரியைக்கொடுத்து விட்டு சென்றான். விருத்தாசலம் சென்று பொதியை அவிழ்க்கும்போது எல்லாம் பயறாக இருந்தன. வணிகன் மிகவும் வருந்தினான்.

பொய் சொன்னதற்காகக் கிடைத்த தண்டனை போலும் எண்றெண்ணிப் பழமலை நாதரிடம் முறையிட்டான். அப்போது விட்ட இடத்தில் தேடவேண்டும் என்று ஓர் அசரீரி உண்டாயிற்று. உடனே வணிகன் இத்தலத்தற்கு வந்து சிவபெருமானை வழிபட்டான். சிவபெருமானருளால் பயறெல்லாம் மீண்டும் மிளகாக மாறின. வணிகன் மகிழ்ச்சியுடன் சென்றான். இது உடையார்பாளையத்திலும் நடந்ததாகவும் கூறுவர்.

மேலும், இத்திருக்கோயில் வளாகத்தில் இராசகோபுரத்தின் தென்புறம் காசி விசுவநாதர் மற்றும் விசாலாட்சி சந்நதியும் கருவறையின் வடபுறம் இத் திருக்கோயிலின் தலமரமாகப் போற்றப்படுகின்ற நெல்லிமரத்தினடியில் நெல்லினேசுவரர் சந்நதி கருவறையின் பின்புறம் பழமலைநாதர் சந்நதியும் அமைந்துள்ளன. ஆதிசங்கரர் இத்திருக்கோயிலுக்கு வருகை தந்த போது நெல்லிவனேசுவரர் சந்நிதியின் முன்பு அமர்ந்து தியானித்து வழிபட்டுள்ளதாகவும் கூறப்படுகிறது. அடுத்ததாக மகாமண்டபத்தின் தென்புறம் காமதேனு என்னும் பசுவானது சிவலிங்கத்திருமேனிக்கு தமது மடியிலிருந்து பாலைச் சொரிந்து திருமுழுக்கு செய்வது போன்ற அமைப்பில் பசுபதீசுவரர் சந்நிதியும் அமைக்கப்பட்டுள்ளது.

கருவறையிலுள்ள மூலவர் திருமேனியான சிவலிங்கம் ஆறு பட்டைகள் கொண்ட அமைப்புடன் வடிக்கப்பட்டுள்ளது. திருக்கோயிலின் முகமண்டபத்தில் தென்திசையை நோக்கியவாறு பெரியநாயகி அம்மனுக்கான சந்நிதி உள்ளது. இத்திருக்கோயிலின் நுழைவு வாயிலில் மூன்று நிலை இராசகோபுரம் எழுப்பப் பட்டுள்ளது. சுவாமி மற்றும் அம்மன் சந்நிதிகளில் இரண்டு தள விமானங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சந்நிதியின் முன்புறம் கொடிமரம் நிறுவப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலைச் சுற்றி கோயிலின் பாதுகாப்பு அரணாக உயர்ந்த மதிற்சுவர் எழுப்பப்பட்டுள்ளது. கோயிலின் வடபுற மதிர்சுவரையொட்டி ஒரு பெரிய தெப்பக்குளம் உள்ளது. அக்காலத்தில் இத்திருக்குளம் இந்நகர மக்களின் பயன்பாட்டிற்கு மிகச்சிறந்த நீர்நிலையாக விளங்கியிருந்ததாக இந்நகர் மக்கள் தெரிவிக்கிறார்கள். கடந்த 31.08.2007ம் நாளன்று திருக்குடமுழுக்கு நடைபெற்றது.

### வரலாற்றுச் சிறப்பு

சோழ மன்னர்களில் முதலாம் இராஜேந்திர சோழனுக்கு முத்தீயைப் போல் மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். அவர்களுள் இராசாதிராசசோழன் என்பவன் முதற் புதல்வன் ஆவான். இவன் ராஜராஜசோழனுக்குப் பேரனாவான். இவனுக்கு இராஜகேசரி என்ற பட்டம் உண்டு. இவன் 101888 – ல் இளவரசுப்பட்டம் பெற்று



1044ல் முடி சூட்டப் பெற்றான். இவன் பல இரசர்களை வென்று ஜெயங் கொண்டத்தில் அசுவமேத யாகம் செய்து அவர்கள் வணங்க வீற்றிருந்ததால் ஜெயங்கொண்டசோழன் எனச் சிறப்பு பெயர், பெற்றான். வில்வர் மீனவர் வெஞ்சினர்சாளுக்கியர் வல்லவர் வணங்க வீற்றீருந்த சோழன் உயர்ந்த பெரும் புகழ்க்கோ இராஜகேசரிவர்மரான உடையார் ஸ்ரீ இராசாதிராச தேவர் என்று ஓர் கல்வெட்டு கூறுகிறது. இவனுக்குத் தலைநகரம் தேவர் என்று ஓர் கல்வெட்டு கூறுகிறது. இவனுக்குத் தலைநகரம் கங்கைகொண்ட சோழபுரம். இவன் பட்டத்தரசி திரைலோக்கிய முடையாள் ஆவாள். உலகுடைய பிராட்டி என்னும் மற்றோர் மனைவியும் உண்டு. இவனுக்கு வாசுதேவ நாராயணர் என்பவர் சமயகுருவாக இருந்தார். இவன் நாட்டின் பல்வேறிடங்களில் போர் செய்து வெற்றி என்னும் ஜெயங்கொண்டதால் ஜெயங்கொண்ட சோழபுரம் என்னும் இவ்வூரை அமைத்தான். மன்னார்குடியில் சோழபுரம் என்னும் இவ்வூரை அமைத்தான். மன்னார்குடியில் ஜெயந்கொண்டநாதர் கோயுலையும், இவ்வூரில் ஸ்ரீ கழுமலை நாதர் திருக்கோயிலையும் கட்டுவித்தான் என்பது வரலாறு.

### இலக்கியச் சிறப்பு

கலிங்கத்துபரணியில் இவ்வூரும் இத்திருக்கோயிலும் சிறப்பிடம் பெற்றுள்ளது.

### தனிச் சிறப்பு

ஒரே சிவாலயத்தில் கோஷ்ட மூர்த்தங்களுடன் அமைந்த இரண்டு சிவாலயங் –களை வழிபட்டநிலையை இத்திருக்கோயிலை வழிபட்டோர் அடைவர். சமய குரவர்கள் நால்வருள் ஒருவரான சுந்தர மூர்த்தி நாயனார் திரு. அரத்துறையை பாடிப்பரவியபின் திருவாவடுதுறைக்கு செல்லும் போது இத்திருக்கோயிலையும் பாடிபரவியிக்கலாம் என்ற குறிப்பு CKS - ன் பெரியபுராண உரையில் இடம் பெற்றுள்ளது தனிச்சிறப்பாகும்.

### திருவிழாக்கள்

சித்திரைத் திங்கள் – முழு நிலவு வழிபாடு, வைகாசித் திங்கள் – விசாகம், ஆனித் திங்கள் திருமஞ்சனம், ஆடித்திங்கள்–பூரம், ஆவணித்திங்கள்–மூலம், புரட்டாசித்திங்கள் – நவராத்திரி, ஐப்பசித்திங்கள் – கந்தா சஷ்டி, மற்றும் அன்னாபிஷேகம் கார்த்திகைத்திங்கள் தீபத்திருநாள், மார்கழித் திங்கள் – திருவாதிரை, மாசித்திங்கள் – மகாசிவராத்திரி, பங்குனித்திங்கள் – உத்திரப் பெருவிழா.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.00 மணிமுதல் பகல் 10.00 மணி வரை**
**மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை**

## பூஜைக்காலங்கள்

இத்திருக்கோயிலில் தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெறுகின்றன்.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி முதல் 9.00 மணிக்குள் |
| சாயரட்சை | மாலை 5.30 மணி முதல் 6.30 மணிக்குள் |

## அமைவிடம்

அரியலூரிலிருந்து கும்பகோணம் செல்லும் சாலையில் அரியலூரில் இருந்து 36 கி.மீ. தூரத்திலும்,கங்கைகொண்ட சோழபுரத்தில் இருந்து 10 கி.மீ தொலைவிலும் ஜெயங்கொண்டம் என்னும் நகரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## வழித்தடம்

அரியலூரிலிருந்தும், கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன்.

தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

**அருள்மிகு கழுமலைநாதசுவாமி திருக்கோயில்**

ஜெயங்கொண்டம், உடையார்பாளையம் வட்டம்,

அரியலூர் மாவட்டம் – 621 802.

E mail ID : manieo1973@gmail.com

அலைபேசி எண் : **99435 30122**





# அருள்மிகு வீர நாராயணபெருமாள் திருக்கோயில்

குருவாலப்பர் கோவில் கிராமம், உடையார்பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு வேதநாராயணப்பெருமாள் (எ) அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் |
| இறைவி | அருள்மிகு வேதவல்லி (எ) மரகதவல்லித் தாயார் ஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவி |
| தீர்த்தம் | பார்கவ புஷ்கரணி, ஸ்வேத புஷ்கரணி, பத்மபுஷ்கரணி |
| ஆகமம் | பாஞ்சராத்ர ஆகமம் |

## தலச் சிறப்பு

நாதமுனிகளுக்கு வேத உபதேசம் செய்த திருத்தலம் யோக ரகசியம் நாத முனிவரிடமிருந்து சீடர் குருகை காவலப்பன் என்ற யோகிக்கு நாத முனிகள் ஞான உபதேசம் செய்தார். இந்த யோகி திருக்கோயில் வழியேயோக ரகசியத்தை தவசு செய்தும், வீரநாராயணப்பெருமானை ஆராதித்தும் 80 வருட காலம் இந்த பெருமாளுக்கு தொண்டு செய்ததால் இவர் பெயராலேயே இந்த கிராமம், குருகை காவலப்பர் கிராமம் எனப்பெயரிட்டு பின்னால் மருவி குருவாலப்பர் கிராமமாக இப்பொழுதும் இருந்து வருகிறது. இதற்கு குருகாபுரி என்ற பெயரும் வழக்கத்தில் இருந்து வருவதால் இத்தலமானது அந்த யோகியின் பெயராலேயே கிராமம் அமைந்து இன்றும் வழக்கத்தில் உள்ளது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

## வரலாற்றுச்சிறப்பு

பார்க்கவ மஹரிஷி, சௌனக மகரிஷி, சாண்டில்ய மகரிஷி, நாரதர், நாத முனிகள் இந்த ஐந்து நபர்களுக்கும் பகவான் (பிரத்யட்சமாக) காட்சிக்கொடுத்த ஷேத்திரம் நாதமுனியின் ஒரு கோரிக்கைக்காக ஏற்று அவர்களது பிரார்த்தனையை நிறைவேற்றும் ஷேத்திரமாக இது விளங்குவது இத்திருக்கோயிலின் வரலாற்று சிறப்பு.

## சிற்பச்சிறப்பு

இத்திருக்கோயில் சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன்னர் சோழர் காலத்தில் கட்டப்பட்டதாக அறிய முடிகிறது. முழுவதும் கருங்கல்லால் கட்டப்பட்ட இத்திருக் கோயிலின் ராஜகோபுர நுழைவாயிலிலும், மற்றும் மகாமண்டப தூண்களிலும் அமைந்துள்ள சிற்பவேலைபாடுகள் கண்ணைக் கவர்கின்றன.

## இலக்கியச் சிறப்பு

இத்திருக்கோயிலில் தமிழ் வளர்ச்சிக்கு உதவும் வகையில் தமிழிலும் அர்ச்சனை செய்யப்படுகிறது. பெருமாளுக்கு ஏற்ற திவ்ய பிரபந்தங்கள் இங்கு நன்முறையில் பாராயணம் செய்யப்படுகிறது.

## தனிச்சிறப்பு

நாதமுனிகள், ஆளவந்தார், மணக்கால் நம்பி, நயினாச்சாரியார் இவர்கள் நால்வராலும் மங்களாசாசனம் செய்யப்பட் அபிமான ஷேத்திரமாகும். இந்த பெருமாளுக்கு நாம் பிரார்த்தனை வைத்து பத்து வாரங்கள் தொடர்ந்து விடாது வந்து வழிபட்டால் நமது பிரார்த்தனை நிச்சயமாக நிறைவேற்றித்தரும் சிறந்த பிரார்த்தனை தலமாக விளங்கி வருகிறது. ஒவ்வொரு சன்னதியும் கங்கை கொண்ட சோழபுரத்தின் ஆலய அமைப்பை போன்று அமைந்துள்ளது.

## இதரச்சிறப்புகள்

6 – ஆம் நூற்றாண்டில் ஆளவந்தாரால் பிரதிஷ்டை செய்யப்பட்டு அதன் பின்னர் சோழ மன்னர் இராஜேந்திர சோழன் காலத்தில் இத்திருக்கோயில் சிறப்பாக கட்டப்பட்டதாக கூறப்படுகிறது.அதற்கேற்ற பழமையும் பெருமையும், இத்திருக்கோயில் கட்டிட கலைமூலம் மெருகேறி நிற்பதை காண்பது இத் திருக்கோயில் தனிச்சிறப்பாக உள்ளது. இத்திருக்கோயில் அருகில் உள்ள பார்கவ புஷ்கரணி, பார்ப்பதற்கு மிக அழகாகவும், மிக நேர்த்தியாகவும் அமையப் பெற்றுள்ளது.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் தமிழ், ஆங்கில வருடபிறப்புகள், ஸ்ரீ ராம நவமி விழா, புரட்டாசி சனிக்கிழமைகள், நவராத்திரி விழா, தீபாவளி, திருக்கார்த்திகை மற்றும் பஞ்ச பருவ உற்சவங்களும், சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 7.00 மணிமுதல் பகல் 11.00 மணி வரை**
**மாலை 5.00 மணி முதல் இரவு 8.15 மணி வரை**



## பூஜைக்காலங்கள்

| | |
|---|---|
| சுப்பரபாதம் | காலை 7.00 மணி |
| திருவாராதனம் | காலை 8.00 - 9.00 மணி |
| திருவாராதனம் சாற்று முறை | மாலை 5.00 - 6.30 மணி |
| சயனம் - ஏகாந்த சேவை | இரவு 8.15 மணி |

## அமைவிடம்

ஜெயங்கொண்டம், சிதம்பரம் – சென்னை செல்லும் பிரதான சாலையில் ஜெயங்கொண்டத்தில் இருந்து 8 கி.மீ. தொலைவிலும், அரியலூரில் இருந்து 40 கி.மீ தொலைவிலும், கும்பகோணத்தில் இருந்து 30 கி.மீ. தொலைவிலும், கங்கை கொண்ட சோழபுரம் திருக்கோயிலின் அருகிலும் அமைந்துள்ளது.

## வழித்தடம்

ஜெயங்கொண்டத்திலிருந்தும், அரியலூரிலிருந்தும், கும்பகோணத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் திருக்கோயில்,**
குருவாலப்பர் கோவில் கிராமம், உடையார்பாளையம் வட்டம்,
அரியாலூர் மாவட்டம். செல் : **98940 35312**



# அருள்மிகு காமாட்சியம்மன் உடனுறை அருள்மிகு கைலாசநாத சுவாமி திருக்கோயில்

திருமானூர், அரியலூர் வட்டம் & மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கைலாசநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு காமாட்சியம்மன் |
| தீர்த்தம் | கொள்ளிட தீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**தலச் சிறப்பு**

இத்திருக்கோயில் சுவாமியையும், அம்பாளையும் ஒரே இடத்தில் இருந்து தரிசனம் செய்ய கூடிய சிறப்புடையது. தென்முக கடவுளாம் தெட்சிணாமூர்த்தி சின்முத்திரை, ஜெயமாலை, இடது கையில் ஓலைச்சுவடி, உடுக்கை, அக்னி பிறப்பு ஆகியவற்றை திருக்கரங்களில் ஏந்தியும் காலடியில் முயலகன் கையில் கத்தியும். கேடயமும் இல்லாமல் பாம்பும் உள்ளது. எனவே, இங்குள்ள தெட்சிணாமூர்த்தி நாக தோஷ மூர்த்தியாக விளங்குகிறார். இத்திருக்கோயின் வடமேற்கு மூலையில் அருள்பாலிக்கின்ற ஜேஷ்டாதேவி, வாராகி, சாயாதேவியுடன் இருக்கிறார். இலட்சுமியை வழிபட்டால் செல்வம் வரும். செல்வம் தங்க வேண்டும் என்றால்ஜேஷ்டாதேவியின் அருள் வேண்டும். சுமார் 750 ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்ட சிவ ஆலயங்களில் தான் ஜேஷ்டாதேவி வழிபாடு இருந்திருக்கிறது. அவ்வகையில் இந்த ஆலயம் மிகவும் பழமையானத என தெரிய வருகிறது. இவரை வழிபட்டால் செல்வம் தங்கும். மனசோர்வு நீங்கும். மனநிம்மதி கிடைக்கும் என்பது இத்தலத்தின் சிறப்பு ஆகும்.

**வரலாற்றுச் சிறப்பு**

இத்திருக்கோயிலில் உள்ள கல்வெட்டுகள் மற்றும் செப்புப்பட்டயங்களில் கண்ட பிரகாரம் கண்டராதித்த சோழனின் மனைவியான செம்பியன்



மாதேவியார் இத்திருக்கோயிலைக் கட்டியவராவார். பிற்கால பாண்டிய மன்னர்கள் காலத்தில் விரிவுப்படுத்தப்பட்டதாக அறிய முடிகிறது. இத்திருக்கோயிலில் உள்ள செப்புத்திருமேனிகள் பிற்கால சோழரின் கலைப்பாணியில் உள்ளன. எனவே ஏறத்தாழ சுமார் 800 ஆண்டுகள் பழமையான திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலுக்கு அரியாலூர் ஜமீன்தார் ஒப்பிலா மழவராயர் என்பவர் கி.பி. 1791 ஆம் ஆண்டு நிவந்தம் அளித்துள்ளார். இக்கல்வெட்டு அம்மன் சந்நியின் இருபுறங்களிலும் உள்ளது. வான் பொய்ப்பினும் தான் பொய்யாத சோழ வளநாட்டின்கண் வற்றாத ஜீவ நதியான கொள்ளிடம் ஆற்றின் வடகரையில் அமைந்த திறைமூரான தியாக விநோதன் ஆற்றூர் என்பது மருவி திருமாநல்லூர் என அழைக்கப்பெற்று தற்போது திருமானூர் என்று அழைக்கப்படுகிறது.

**சிற்பச் சிறப்பு**

தென்முக கடவுளாம் தெட்சிணாமூர்த்தி, சின்முத்திரை ஜெபமாலை இடது கையில் ஓலைச்சுவடி உடுக்கை அக்னிப்பிழம்பு ஆகியவை திருக்கரங்களில் ஏந்தியும் காலடியில் முயலகன் மீது கால் பதித்துள்ளார். முயலகன் கையில் கத்தியும், கேடயமும் இல்லாமல் பாம்பு உள்ளது. எனவே இங்குள்ள தெட்சிணாமூர்த்தி நாகதோஷ மூர்த்தியாக விளங்குகிறார்.

**தனிச்சிறப்பு**

இத்திருக்கோயிலில் உள்ள தெட்சிணாமூர்த்தி கடவுளையும் ஜேஷ்டாதேவியையும் வழிபடுவது தனிச்சிறப்பு. தெட்சிணாமூர்த்தி கடவுளை வழிபட்டால் நாகதோஷ நிவர்த்தியும், ஜேஷ்டா தேவியை வழிப்பட்டால் செல்வ வரவும், வந்த செல்வம் நிலைபெறவும் அமாவா சை தோறும் சிறப்பு அபிஷேகம் செய்து வழிபட வேண்டும்.

**திருவிழாக்கள்**

சித்திரை வருடபிறப்பு மாதாந்திர கார்த்திகை பிரதோஷம், வைகாசி விசாகம், ஆனித்திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, விஜய தசமி, தீபாவளி, அன்னாபிஷேகம், திருகார்த்திகை தீபம், திருவாதிரை, பொங்கல், தைபூசம், மாசிமகம், பங்குனி உத்திரம் ஆகியன இத்திருக்கோயிலில் நடைபெறும் திருவிழாக்கள் ஆகும்.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.00 மணிமுதல் பகல் 12.00 மணி வரை**
**மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை**

**பூஜாகாலங்கள்**

இத்திருக்கோயிலில் தினமும் நான்கு கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.30 மணி முதல் 9.00 மணிக்குள் |
| உச்சிகாலம் | பகல் 11.30 மணி |
| சாயரட்சை | மாலை 6.30 மணி முதல் 6.30 மணிக்குள் |
| அர்த்த சாமம் | இரவு 8.00 மணி |

**அமைவிடம்**

திருச்சிராப்பள்ளியிலிருந்து திருமழபாடி வழியாக 60 கி.மீ. தொலைவிலும், தஞ்சையிலிருந்து 19 கி.மீ. தொலைவிலும் அரியலூரிலிருந்து 22 கி.மீ. தொலைவிலும் திருவையாற்றிலிருந்து 7 கி.மீ. தொலைவிலும், திருமழபாடி தலத்திலிருந்து 11 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.

**வழித்தடம்**

திருமழபாடியிலிருந்தும், தஞ்சையிலிருந்தும், அரியலூரிலிருந்தும், திருயைாற்றிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.


தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

**அருள்மிகு காமாட்சியம்மன் உடனுறை**
**அருள்மிகு கைலாசநாத சுவாமி திருக்கோயில்**
**திருமானூர், அரியலூர் வட்டம் & மாவட்டம்**

அலைபேசி எண் : **99435 30122**






# அருள்மிகு சோழீசுவரர் திருக்கோயில்

விக்கிரமங்கலம், உடையார் பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம்.

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சோழீசுவரர் |
| இறைவி | அருள்மிகு பூரண சந்திர கலாம்பிகை |
| தீர்த்தம் | கங்கா தீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

**தலச்சிறப்பு**

இத்திருக்கோயிலில் இங்குள்ள சனீஸ்வரர் சன்னதியில் ஞாயிறு, செவ்வாய், சனிக்கிழமைகளில் தாமரை, அரளி போன்ற பூக்களை கொண்டு அர்ச்சனை செய்து எள்தீபம் ஏற்றி வழிபட்டால் நவக்கிரகதோஷங்கள் நிவர்த்தியாகி திருமணத் தடைகள் நீங்கி புத்திர பாக்கியங்கள் கிடைக்கும் என்பது ஐதீகம். இதே போல் பைரவர் சன்னதியில் வழிபாடுகள் செய்தால் எதிரிகளால் ஏற்படும் தொல்லைகள் நீங்கி வளமான வாழ்க்கை அமையும். இத்திருக்கோயில் அம்பாள் தெய்வீக சக்தி நிறைந்த அம்பாளாகும். திருநள்ளாறு போன்று இங்கு உள்ள சனிபகவானும் மிகவும் சக்தி வாய்ந்தவர்.

**வரலாற்றுச்சிறப்பு**

இவ்வூரின் பழைய பெயர் விக்கிரம சோழபுரம் என்பதாகும். விக்கிரமசோழன் என்ற பட்டபெயர் கொண்ட முதலாம் இராஜேந்திரசோழன் (1012 முதல் 1044 வரை) காலத்தில் இவ்வூர் வணிக நகரமாக உருவாக்கப்பட்டது. விக்கிரமங்கலம் அருள்மிகு சோழீசுவரர் திரு க்கோயில் முதலாம இராஜேந்திர சோழன் காலத்தில் இன்றைக்கு சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பெற்ற பழமையுடையது. கல்வெட்டு மற்றும் செப்பேடுகளில் சோழீசுவரர் பிறையணியம்மை என இக்கோயில் இறைவனும், அம்மனும் குறிப்பிடப்படுகின்றனர். இரண்டு கோபுரங்களும், பிரகாரங்களும் நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டன.

## சிற்பச் சிறப்பு

இத்திருக்கோயிலில் இராஜகோபுரத்துக்கும் மகா மண்டபத்துக்கும் இடைப்பட்ட பகுதியில் கட்டப்பட்டிருக்கும் மண்டபம் மிக அழகான நாயக்கர் கால மண்டபமாகும். இது கலை அழகுமிக்க சிற்பங்களும் தூண்களும் ஓவியங்கள் வரையப்பட்ட கூரையையும் உடைய தாக அமைந்துள்ளது. இதன் தூண்களில் யாழி உருவங்கள், வீரர்கள் குதிரை மேல் அமர்ந்து ஓட்டும் கோலத்தில் செதுக்கப்பட்ட உ ருவங்கள் உள்ளன. வடக்குப் பக்க தூணில் அரசி உருவமும் அவருடைய தோழிப் பெண்களின் உருவமும் அழகாக செதுக்கப்பட் டுள்ளன. மற்றொரு தூணில் வீரப்பத்திரரின் எழிலான தோற்றம் வடிவமைக்கப்பட்டுள்ளது. தென்பக்கம் உள்ள இரண்டு தூண்கள் ஒன்றில் நாயக்கரின் உருவமும் அவருடைய அலுவலர், பணியாளர் உருவங்களும் மற்றொரு தூணில் காவலாளியின் உருவமும் செதுக்கப் பட்டுள்ளது.

இத்திருக்கோயில் அமைந்துள்ள நவக்கிரக சன்னதி குறிப்பிடத்தக்க சக்தி வாய்ந்த தெய்வ சன்னதி ஆகும். இங்கு உள்ள நாயக்கர் மண்டபத்தின் கூரையின் நடுவில் செதுக்கப்பட்டுள்ள 12 இராசி மண்டல சிற்பங்கள் மிக அழகானவை. ஒவ்வொரு ராசிக்கும் உரிய கடவுள் சிற்பம் இங்கு செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடப்பட்டதாகும்.

நவக்கிரக தோஷம் உள்ளவர்கள் இந்த கோயிலுக்கு வந்து வழிபட்டு ராசி மண்டபத்தில் நின்று வணங்கி நவக்கரக பூஜை செய்து தோஷ நிவர்த்தி பெறலாம். திருமணத்தடை உள்ளவர்கள் குழந்தைபேறு இல்லாதவர்கள் இக்கோயிலுக்கு வந்து வழிபாடு செய்து பலன்பெற்று வருவது கண் கூடாக காணத்தக்கதாகும்.

## இதரச் சிறப்புகள்

விக்கிரமங்கலம் சோழீசுவரர் திருக்கோயிலில் அழகிகய சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும உள்ளன. இவை கோயில் வழிபாட்டிற்கும் சமய கலை வரலாற்றிற்கும சிறந்த சான்றுகளாக உள்ளன.

## திருவிழாக்கள்

பிரதோஷம், சித்திரை வருடப்பிறப்பு, ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி அன்னாபிஷேகம், தீபாவளி, திருவாதிரை, பொங்கல் மற்றும் வெள்ளிக்சிழமை வாரவழிபாடும் நடைபெற்று வருகின்றன.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.00 மணிமுதல் பகல் 12.00 மணி வரை**
**மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை**



## பூஜாக்காலங்கள்

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |
| அர்த்த சாமம் | இரவு 8.00 மணி |

## அமைவிடம்

அரியலூரிலிருந்து 24 கி.மீ. தொலைவிலும், வி.கைகாட்டியிலிருந்து 13 கி.மீ. தொலைவிலும், ஜெயங்கொண்டத்திலிருந்து 30 கி.மீ. தொலைவிலும், திருச்சியிலிருந்து 76 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

## வழித்தடம்

அரியலூரிலிருந்தும், வி.கைகாட்டியிலிருந்தும், ஜெயங்கொண்டத்திலிருந்தும், திருச்சியிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு சோழீசுவரர் திருக்கோயில்,**
**விக்கிரமங்கலம், உடையார் பாளையம் வட்டம்,**
அரியலூர் மாவட்டம் 621 701
E mail : manieo1973@gmail.com
கைபேசி எண் : **99435 30122**



# அருள்மிகு பாலாம்பிகா சமேத கார்க்கோடேசுவரர் திருக்கோயில்

காமரசவல்லி, அரியலூர் வட்டம் மற்றும் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கார்கோடேசுவரர் (எ) சௌந்தரேசுவரர் |
| இறைவி | அருள்மிகு பாலாம்பிகை அம்மன் |
| தீர்த்தம் | சுந்தர தீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

## தலச் சிறப்பு

சிவபெருமானின் கோபத்திற்கு ஆளாகி நெற்றிக்கண் நெருப்பால் எரித்து அழிக்கப்பட்ட காமனின் (மன்மதன்) மனைவி இரதிதேவி தன் கணவனை தனக்கு உயிர் மீட்டுத் தருமாறு மாகவிஷ்ணுவிடம் சென்று முறையிட்டதால் அவர் இரதியை இத்தலத்தில் உள்ள சுந்தரதீர்த்தம் என்ற குளத்தில் நீராடி சிவலிங்க பிரதிஷ்டை செய்து வழிபட்டு தவம் செய்யுமாறு கூறினார். அதேபோல் செய்த இரதியின் தவத்திற்கு மனமகிழ்ந்த இறைவன் மன்மதனை மீண்டும் உயிர் பெறச் செய்து அருளினார். அவ்வாறு காமனும் இரதியும் ஒன்று சேர்ந்த தலமிது என்பதால் இவ்வூர் காமரசவல்லி என்ற பெயர் பெற்றது. இன்னும் அவ்வூரில் மாசி மாதத்தில் காமன் இரதி கதையை விளக்கி காமன் பண்டிகை விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

## வரலாற்றுச் சிறப்பு

பழமையான இக்கோயிலில் 40-க்கும் அதிகமான கல்வெட்டுகள் உள்ளன. இங்குள்ள கல்வெட்டுகளில் மிகவும் பழமையானது இராஜகேசரிவர்மன் என்ற பட்டம் கொண்ட சுந்தரசோழரின் (கி.பி.957 முதல் 974 வரை ) ஐந்தாம் ஆண்டில் (கி.பி. 962 வரை) எழுத ப்பெற்றது ஆகும். இத்திருக்கோயில்



ஆதித்திய சோழன் (கி.பி. 871 முதல் 907) காலத்திலேயே செங்கல் கட்டுமானமாக இருந்ததாக கல்வெட்டுக்கள் கூறுகிறது. எனவே இக்கோயில் இன்றைக்கு 1141 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது என அறிகிறோம்.

## சிற்பச் சிறப்பு

மன்மதன் இரதிதேவியைச் சித்தரிக்கும் வகையில் கோயிலில் அழகின் பிறப்பிடமாக விளங்கும் இரதியின் செப்புத் திருமேனி ஒன்று உள்ளது இரண்டு கைகளை ஏந்தி இறைவனிடத்தில் தன் கணவனை உயிர்ப்பித்துத் தரும்படி மடிப்பிச்சை கேட்பது போன்ற கோலத் தில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் கடகராசி, கடக லக்கனக்காரர்கள் சௌந்தரேசுவரர் என்கிற கார்க்கோடசுவரரை வழிபடுவது விசேஷம், தவிர திருமணப்பேறு வேண்டுவோர்,குழந்தைப்பேறு வேண்டுவோர், இல்லறம் செழிக்க விரும்புவோர், நாகதோஷத்தினால் பாதிக்கப்பட்டடவர்கள் சுவாமி, அம்மனுக்கும் சிறப்பு அபிஷேகம் செய்து பரிகாரம் செய்துக் கொள்ளும் திருக்கோயிலாகும்.

## இதரச்சிறப்புகள்

இத்திருக்கோயில் அலங்கார மண்டபத்தில் அழகிய சிற்பகல் பலகையொன்று உள்ளது. சோழர் கலைப்பாணியில் உள்ள இச்சிற்பப்பலகை 4 அடி நீளமும், 1 அடி அகலத்திலும் உள்ளது. இதில் சிவலிங்கத்தினை கார்கோடகன் பாம்பு வழிபடுவது போலவும் தேவர்கள், முனிவர்கள், அரசன், அரசியார் வழிபட்டு நிற்பது போலவும் செதுக்கப்பட்டுள்ளது. மேலும், பரீட்சித்து மகாராஜா நாகம் தீண்டி இறந்துவிட அவனுடைய மகன் ஜனமே ஜய மகாராஜா உலகில் உள்ள எல்லா பாம்புகளும் யாகத்தீயில் விழுந்து மடிந்து விட பாம்புகளின் தலைவனான கார்கோடகன் மட்டும் மகாவிஷ்ணுவை நோக்ககி தவம் இருக்க மகாவிஷ்ணுவின் அறிவுரைப்படி இத்தலத்தில் உறையும் சிவபெருமானை வழிபட்டு தன்னுடைய குலம் தழைக்க வரத்தை கடக லக்கனம் கடக ராசியில் பெற்றார். கார்கோடகன் வரம் பெற்றதால் ஸ்ரீ கார்கோடேசுவரன் சுவாமி என காரணப் பெயருடன் அருள்பாலிக்கிறார்.

மேலும் ஸ்ரீ கார்கோடேசுவரர் இரண்டு கட்டளைகளை பிறப்பித்தார். தன்னை யார் வந்து வணங்கினாலும், அவர்களுக்கு கால ஸர்ப்பதோஷ விவைகளான திருமண தடை, உத்யோக தடை, புத்திரபாக்கியம் இன்மை, தம்பதிக்குள் மனவேற்றுமை பிரிவுகள், கல்வித்த டை, சொல்லத் தெரியாத, சொல்ல முடியாத வியாதிகள், மனக்குழப்பங்கள் இருக்கக்கூடாது, என்றும் கால ஸர்ப்பதோஷ நிவர்த்தித லமாக இருக்க வேண்டும் என்றும் வரம் அளித்தார்.

இந்த ஊரில் யாரையும் பாம்பு தீண்டக்கூடாது என்றும அப்படி தீண்டினால் அவர்கள் உயர் இழக்க கூடாது என்றும் உறுதிவாங்கிக் கொண்டார்.

அன்றிலிருந்து இன்று வரை இந்த திருத்தலத்தில் பாம்பு கடித்து இறந்தவர்கள் யாரும் இல்லை என்பது கண்கூடு. கடக லக்னம், கடக ராசிக்காரர்கள் வழிபட வேண்டிய திருத்தலம். கால ஸர்ப்ப தோஷம் போக்குகின்ற பூவுலகில் உள்ள ஒரே திருத்தலம் இதுவாகும். இத்திருக்கோயிலுக்கு திருப்பணி செய்து 10.02.2014 – ல் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

### திருவிழாக்கள்

சித்திரை வருடப்பிறப்பி, ஆடிப்பூரம், ஆனித்திருமஞ்சனம், ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி, அன்னாபிஷேகம், தீபாவளி, நவராத்திரி, திருக்கார்த்திகை தீபம், திருவாதிரை முதலிய திருவிழாக்கள் சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.30 மணிமுதல் பகல் 12.00 மணி வரை**
**மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை**

### பூஜா காலங்கள்

இத்திருக்கோயிலில் தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெற்றுவருகிறது.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி |
| சாயரட்சை | இரவு 8.00 மணி |

### அமைவிடம்

அரியலூர் தஞ்சாவூர் நெடுஞ்சாலையில் அரியலூருக்கு தெற்கே 26 கி.மீ. தொலைவிலும், திருமானூருக்கு வடகிகழக்கே 23 கி.மீ. தொலைவிலும், திருவையாறில் இருந்து வடகிழக்கே 29 கி.மீ. தொலைவிலும், திருச்சிராப்பள்ளியில் இருந்து கிழக்கே 75 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

### வழித்தடம்

அரியாலூரிலிருந்தும், திருமானூரிலிருந்தும் திருவையாற்றிலிருந்தும், திருச்சிராப்பள்ளியிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு சௌந்தரேசுவரர் திருக்கோயில்,**
காமரசவல்லி,
அரியலூர் வட்டம் மற்றும் மாவட்டம் 621 715
E mail : manieo1973@gmail.com



### அபிஷேகப் பொருட்களும் அவற்றின் பயனும் :

நல்லெண்ணெய் – சுகம்
அரிசி மாவு – கடன் தீரல்
நெல்லிமுள்ளி – நோய் நீக்கம்
மஞ்சப்பொடி – வசீகரம்
பஞ்சகவ்யம் – தூய்மை
பஞ்சாமிர்தம் – ஜயம்
பால் – ஆயுள்
தயிர் – மக்கட்பேறு
நெய் – முத்தி
தேன் – சுகம்
கரும்பின் சாறு – பிணி நீக்கம்
எலுமிச்சை – எமபயம் போக்கல்
இளநீர் – போகம்
சந்தனம் – இலட்சுமிகடாட்சம்
கும்பம் – குற்றங்கள் தீரல்



# அருள்மிகு சொக்கநாதசுவாமி திருக்கோயில்,

## கோடாலிகருப்பூர், உடையார்பாளையம் வட்டம்,
## அரியலூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சொக்கநாதசுவாமி |
| இறைவி | அருள்மிகு மீனாட்சி |
| தீர்த்தம் | மகாமக தீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### தலச்சிறப்பு

சுமார் 1500 வருடங்கள் பழமையானது இத்திருத்தலம். முனிவர்கள் கறுப்புப் புலியாக உருமாறி சிவனை பூஜித்த அதிசயமான திரு த்தலம். கோடாலிகளை ஆயுதத் தளவாடங்களுக்காக வார்த்தெடுக்கும் திறமை வாய்ந்த கொல்லர்கள் வாழ்ந்த திருத்தலம். அதனாலே கோடாலி கருப்பூர் என்று பெயர் பெற்றது இத்திருத்தலம். பக்தனுக்காக இறங்கி மீனாக்ஷி சொக்கநாதப்பெருமானாக அம்மையப்பர்கள் காட்சியளித்த அற்புதமான திருத்தலம். அப்பர் பெருமான் இத்தலத்து ஈசனை வர்ணித்து குறிப்பிட்ட செய்திகளை நாம் கரந்தைச் செப்பேடுகளில் இன்றும் காணலாம். இத்திருக்கோயில் பற்றிய குறிப்புகள் பல செப்பேடுகளிலும், கல்வெட்டுகளிலும் காணப் படுகன்றன.

### தலவரலாறு

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மகரிஷிகளில் பலர் சிவ பூஜை செய்வதற்கு மரங்களின் மீதிருந்த பூக்களை பரிக்க ஏதுவாக இருப்பதற்காகவும், கானகத்தில் எந்தவிதமான இடையூறுகளும் இன்றி தவம் செய்வதற்காகவும் பல முனிவர்கள் புலிகளாய் தங்கள் தவவலிமையால் உருமாறி இறைவனைப் பூஜித்து வழிப்பட்டுப் பேறு பெற்றனர். அத்தகைய முனி சுரேஷ்டர்களில் ஒரு முனிவர் கருப்புப் புலியாய் உருவெடுத்து ஈசனை இத்தலத்திலே மனம் உருகிப்



பூஜித்தார். இறைவன் உமையம்மையுடன் ரிஷபாரூடராய்த் திருக்காட்சி தந்து அவருக்கு வரங்கள் பல நல்கி பின் கைலாயப் பதவியும் முக்தியும் தந்தருளினார். இதனாலே இத்தலத்து ஈசன் கருப்புலீசுவரர் என்றழைக்கப்பட்டு பின்னர் அதுவே கருப்புலியூர் என்று மருவியது.

சுமார் 1500 வருடங்களுக்கு முன் தஞ்சை மாநகரையும், பழையாறை நகரையும் தலைநகரங்களாகக் கொண்டு ஆட்சி செய்த சோழ மன்னர்கள் இத்திருத்தலத்தை எடுப்பித்து அற்புதமாகத் திருக்கோயில் எழுப்பி திருக்கோயிலிலுக்கென்று நிபந்தங்களையும் அளித்து மகிழ்ந்தனர். அப்போது இத்தலம், நீலமேகபுரம் என்றும் ஈசன் விஷாபஹரண கருப்லீஸ்வரர் என்றும் போற்றிக் கொண்டாடப்பட்டார்.

அக்காலத்தில் வாழ்ந்த பக்தன் ஒருவர் கூடல் மாநகரில் வீற்றிருக்கும் அம்மையப்பராம் மீனாட்சி சொக்கநாதர்பால் அளவு கடந்த பக்தி கொண்டிருந்தான். இத்தலத்தில் அருள்காட்சி தரும் கருப்பூலிசுவரரை சொக்கநாதராகவே எண்ணி மிகவும் அன்புடன் பூஜித்து வந்தான். இதைக் கண்டு மகிழ்ந்த அம்மையப்பன் அவனுக்கு இத்திருத்தலத்திலே மீனாட்சி சொக்கநாதராகவே திருக்காட்சி தந்தருளினார். மனம் மகிழ்ந்து, நெக்குருகி வேண்டி நின்ற பக்தனுக்காகவே அன்று முதல் மீனாட்சி சொக்கநாதராகவே இத்தலத்தில் அம்மையப்பன் அருளி வருகிறார். கூடல் மாநகரிலே தன் தங்கையான மீனாட்சி தேவியை சிவப்பரம் பொருளுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்த பெருமாள் இத்தலத்திலும் தேடி வந்து குடியமர்நத அதிசயம் இத்தலத்தில் நிகழ்ந்தது. சிவன் கோவிலுக்கு எதிரே பெருமாள் கோவிலும் கம்பீரமாய் நின்று திருக்காட்சி தருகிறது. அக்காலத்தில் கொள்ளிட ஆற்றில் பெருக்கெடுத்த வெள்ளப்பெருக்கால் ஊர் மறைந்ததாகவும், ஆனால், சிவன் கோவிலும், பெருமாள் கோவிலும் சற்றும் அசையாமல் கம்பீரமாய் நின்றதாகவும் குறிப்புகள் கூறுகின்றன.

பிற்காலதில் சோழவளநாட்டை ஆண்ட கரிகாற் சோழன் காலத்தில் கொள்ளிட ஆற்றின் மீது அணைகளைக் கட்டிப் பல ஊர்களையும் வெள்ளத்தினின்று காத்ததாகக் கரந்தைச் செப்பேடுகள் கூறுகின்றன.

திருப்பாற்கடலைக் கடைந்த போது முதலில் திரண்டு வந்த விஷத்தை அருந்தியதால் இத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஈசனை விஷாபஹரண கருப்புலீசுவரர் என்றும் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் தம்முடைய தக்கயாகபரணி எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலும் இவ்வூருக்கு அருகில் நிரம்ப ஆயுதங்கள் வைக்கும் ஆயூதகளம் இருந்ததாகவும் இவர் குறிப்பிடுகிறார். ஆயுதப் பட்டரையாகவும், யுத்த ரகசியமாகவும் இத்தலம் வழங்கப்பட்டதாகவும் கூறுகின்றனர்.

இத்திருக்கோவிலில் இருந்து சுரங்கப் பாதைகள் பழையாறைக்கும், தஞ்சாவூருக்கும், பூம்புகாருக்கும், ஜெயங்கொண்ட சோழபுரத்துக்கும் இருந்ததாகவும் அறிய வருகிறது.

**வரலாற்றுச் சிறப்பு**

கி.பி.985 – ஆம் ஆண்டுகளில் முதலாம் ராஜராஜன் காலத்தில் இத்திருக்ககோவிலின் அடியில் கீழ்ப்பழையாறைக்கும், ஜெயங்கொண்ட சோழபுரதுக்கும் இடையே ஆயூதங்கள் எடுத்துச்செல்லவும், படைகளை நகர்த்தவும், சுரங்கப் பாதைகள் அமைக்கப்பட்டதாகவும் கூறப்படுகின்றது. பின்னர் இத்தலம் கி.பி. 1220 – ஆம் ஆண்டு இரண்டாம் இராஜராஜேந்திர சோழன் தன் அன்னை திரிபுவன மாதேவியின் விருப்பப்படி இத்திருக்கோவிலுக்குக் கும்பாபிஷேகம் செய்வித்ததாகவும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கி.பி.1737 முதல் கி. பி. 1882 முடிய தஞ்சையை ஆண்ட இரண்டாம் சரபோஜி மன்னர் இத்தலத்தில் உள்ள பெருமாள் கோவில், சிவன் கோவில், படை வெட்டி பட்டாளத்தம்மன் கோவில், வைஷ்ணவிதேவி திருக்கோவில்களைப் புனரமைத்து கோடாலிகருப்பூரில் பெருநிலக்ககிழார்கள் வசம் ஒப்படைத்ததாகவும் கூறப்படுகிறது.

இது பற்றிய ஓலைச் சுவடிகள், ஆயுதப்பட்டறை பற்றிய ரகசியக் குறிப்புகள் ஆககியவை தஞ்சை சரஸ்வதி மஹாலுக்கு மாற்றப்பட்டதாய் பெய்டன் என்ற ஆங்கிலேயர் செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சோழ இளவரசி குந்தவை தேவியார் சிறந்த போர்ப்பயிற்சி பெற்றவர். மகளிர் படைப்பிரிவுக்கு தலைவியாக விளங்கியவர். இவரது வலது கரமாய்ச் செயல்பட்டவர்கள் கருப்புலீசுவரம் பெருமாள் கோவில் பட்டாச்சாரியான பிரம்மச்சாரி பரசு ஆழ்வார் நம்பியாண்டார் வீரநாராயணனும், அதே கோவில் ஆண்டாள் தாயார் அம்சம் பெற்ற பிறப்பறியா அவதாரத் தாயரும் பிரம்மச்சாரியும் போர் பயிற்சி பெற்றவருமான வைஷ்ணவி தேவியும் ஆவார். இவர்கள் ஆயுதப்பட்டறைகளை நிர்வகித்து வந்தனர். ஹொய்சாள மன்னன், இரண்டாம் நரசிம்மனை தாக்ககி கோயில்களை நாசமாக்கினான். வயதானாலும் எதிரிப் படைகளுடன் வீரமாய்ப் போரிட்டு வீரமரணம் எய்தினார் வைஷ்ணவிதேவி. பின்னர் தன் செய்கைக்கு வருந்திய மன்னன், வைஷ்ணவிதேவிக்கு வீரக்கல் நாட்டி ஆலயம் அமைத்தான். காவல் காக்கும் எல்லையம்மனாய் நோய் நீக்கும், பாறையாய் வானம் பார்த்த படைவெட்டி பாளையத்தம்மனை பிரதிஷ்டை செய்து வழிபட்டான். இந்த வரலாற்றுச் செய்தி ஆனை மங்கலதானம் முதல் இடைபட்ட ஊரான ஆலங்குடியிலிருந்து நீலமேகபுரம் என்றழைக்கப்படுகின்ற கோடாலிக்கருப்பூர் வரை உள்ள கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. அந்நியர் ஆதிக்கம் தொடங்கும் முன் கி.பி.1327ல் மேட்டூர் தெற்கல் உள்ள பூலாம்பட்டியில், கஞ்சமலை சித்தர் கோவில் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட



இரும்புத் தாதுக்களை உருக்கி தரம் பிரித்து வேல், வாள் கோடாலிகள் போன்ற ஆயுதங்கள் வார்த்தெடுக்கும் திறமை மிக்கக் கொல்லர்கள் வாழ்ந்த ஊர் கரும்புலிவனம் எனும் கோடாலிக்கருப்பூர்.

**இலக்கியச் சிறப்பு**

யுத்த கோடாலிகள் வடித்துக் கொடுத்த கருப்புலீஸ்வரன் கோடாலிக் கடனே என்ற வழக்கு மொழி பிற்காலத்தில் கோடாலிக் கருப்பூர் என்று வழங்கலாயிற்று. பரசு என்றால் கோடாலி

பரசு ஆழ்வார் நம்பியாண்டான் வீரநாராயணன் சோழர் மகளிர் படைப்பிரிவிலும், யுத்த களத்தில் சிறந்த வீரனாகவும், சாணக்கியனாகவும், அவன் செய்த சாகசங்கள் காரணமாக பரசு கருப்பு நாராயணபுரம் பரசு நீலமேகபுரம் என்று அழைக்கப்பட்டு பின்னர் கோடாலிக் கருப்பூர் என்று மருவியதாகவும் ஒரு வரலாற்றுச் செய்தியும் உண்டு.

இதுபற்றிய செய்திக் குறிப்புகள் கரந்தையில் கண்டெடுக்கப்பட்ட 57 செப்பேடுகளில் 37ம் பிரிவிலும் தஞ்சை சரஸ்வதி மஹால் ஓலைச் சுவடிகளிலும் காணப்படுகிறது.

இத்திருக்கோயிலுக்கு இராஜராஜன் அளித்த நிவந்தங்கள் பற்றிய சில குறிப்புகள்தஞ்சை பிரஹதீஸ்வரர் கோவில் சுவர்களில் உள்ள கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.

இத்திருத்தலம் பாடல் பெற்ற தலமாக இல்லாது போனாலும் அப்பர் பெருமான் இல்லத்து ஈசனை அத்தி வண்ணத்தழகனை நான் கண்ட கருப்புலீசுவரர் என்று போற்றிக் குறிப்பிட்டுள்ள செய்தி கரந்தைச் செப்பேடுகளில் காணப்படுகின்றது.

**தனிச்சிறப்பு**

இத்திருக்கோவில் மூன்று நிலை இராஜகோபுரத்துடன் அழகுற காட்சி தருகின்றது. துவஜஸ்தம்பம் இல்லாவிடினும் அந்த இடத்தில் நந்திதேவரையும், பலிபீடத்தையும் காணலாம். கொடிமரத்து விநாயகர் என்ற திருநாமத்துடன் அங்கே ஒரு விநாயகரும் திருக்காட்சி தருகிறார் அர்த்தமண்டபத்தில் இடதுபுறம் ஸ்ரீ விநாயகர் தரிசனம் தருகிறார். ஈசன் வட்டவடிவமான ஆவுடையாருடன் திருக்காட்சி தருகிறகார். மூர்த்தி சிறியவரானாலும் கீர்த்தியில் பெரியவர். பக்தனுக்காக இரங்கி மதுரைசொக்கனாய் தரிசனம் தந்த கருணாமூர்த்தி. ஈசனின் திருவிளையாடல்களை யாரால் அறிய முடியும்? ஆதியும் அந்தமுமில்லா தயாபரனல்லவா அவன்? நினைத்த மாத்திரத்தில் நினைத்ததை நிறைவேற்றும் ஈசனை கருப்பு சொக்க நாதனை மனதாரத் தொழுதிடுவோம்.

பிரகாரத்தில் முதலில் தல விநாயகர். இவரது திருநாமம் ருணவிமோசன விநாயகர். கடன்களிலிருந்து நம்மை விடுவித்து சகல ஐஸ்வர்யங்களையும் மாறாது வழங்குபவர். இவரைத் தொடர்ந்து நான்கு ஞாயிற்றுக்கிழமைகள் வழிபட்டால் கடன்களிலிருந்து விடுபட்டு ஐஸ்வர்யம் கிட்டும் என்பது உறுதி.

வள்ளி தேவசேனா சமேத சுப்ரமணியரையும் நாம் தரிசிக்கலாம். கஜலக்ஷ்மியும் காருண்ய ரூபமாய் தரிசனம் தருகிறாள். கோஷ்டத் தில் ஸ்ரீ தஷிணாமூர்த்தியையும் வரப்பிரசாதியான ஸ்ரீ துர்க்கையையும் நாம் தரிசிக்கலாம். சிவன் கோவில்களில் எப்போதும் இருப்பது போல் இத்திருக்கோவிலிலும் நடராஜ சபை அமைந்துள்ளது. தன் ஆனந்தத் தாண்டவத்தால் அகிலத்தை அடக்கியாளும் நடராஜனின் தரிசனம் நம்மை பரவசப்படுத்துகிறது.

பிரகாரத்தில் கஜலக்ஷ்மி சன்னதிக்கு நேரெதிரில் பைரவரையும் அருகில் சூரியனையும் தரிசிக்கலாம்.தேய்பிறை அஷ்டமியில் இவரை வழிபட்டால் சகல தோஷங்களிலிருந்தும் நிவாரணம் கிடைக்கும். சுற்றின் முடிவில் நவக்ரஹங்களையும் நாம் தரிசிக்கலாம்.

விமானத்தின் கீழ் ஈசனும் அன்னையும் தனித்தனியே சன்னதிகள் கொண்டு திருக்காட்சி தருகின்றனர். அம்பாள் மீனாட்சி அம்மை சதுர்புஜங்களில் மேல் திருக்கரங்களில் பாச, அங்குசத்தோடும், கீழிரு கரங்களில் அபயவரதத்தோடும், மின்னாயிரம் ஒரு மெய் வடிவாக மண்களிக்கும் பச்சை வண்ணமுகமாகி மதங்கர் குலப் பெண்களில் தோன்றிய பேரழகோடும் தரிசனம் தருகிறாள். வேண்டுவோர்க்கு திருமணத்தடை நீக்கி, தீர்க்கமாங்கல்யம் வழங்கிப் பேரருள் புரிகின்றாள். இவளின் பொற்பாதங்களில் படி அரிசியுடன் மாங்கல்ய சரடைவைத்துப் பிரார்த்திக் கொண்டு, சரடை வீட்டிற்கு எடுத்துவர விரைவில் திருமணம் கைகூடுகிறது. திருக்கோவில் பிரகாரத்தில் ஈசான்ய மூலையில் யாகசாலை மண்டபமும், தென்மேற்கு மூலையில் மடப்பள்ளியும் அமைந்திருக்கின்றன. 01.06.1966 ஆம் ஆண்டு நடந்த கும்பாபிஷேகத்திற்குப் பின் தற்போது 13.04.2014 -இல் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

## திருவிழாக்கள்

சித்திரை திங்கள் – முழுநிலவு வழிபாடு, வைகாசித் திங்கள் – விசாகம், ஆனித்திங்கள் – திருமஞ்சனம், ஆடித் திங்கள் – பூரம், ஆவ ணித் திங்கள் – மூலம், புரட்டாசித் திங்கள் – நவராத்திரி, ஐப்பசித்திங்கள் – கந்தர்சஷ்டி மற்றும் அன்னாபிஷேகம். கார்த்திகைத் திங்கள் – தீபத் திருவிழா, மார்கழித் திங்கள் – திருவாதிரை, மாசித் திங்கள் – மகாசிவராத்திரி, பங்குனித்திங்கள் – உத்திர பெருவிழா



**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.00 மணிமுதல் பகல் 10.00 மணி வரை**
**மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை**

## பூஜா காலங்கள்

காமிக ஆகம விதிப்படி தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெறுகின்றன.

| | |
|---|---|
| காலை சந்தி | காலை 8.00 மணி முதல் 9.00 மணிக்குள் |
| சாயரட்சை | மாலை 5.30 மணி முதல் 6.30 மணிக்குள் |

## அமைவிடம்

கோடாலி கருப்பூர் எனும் திருத்தலம் ஜெயங்கொண்டம் – கும்பகோணம் சாலையில், கும்பகோணத்திலிருந்து சுமார் 30 கி.மீ. தொலைவிலும், ஜெயங்கொண்டம் நகலில் இருந்து 13 கி.மீ. தொலைவிலும், தா.பழுவூரில் இருந்து 6 கி.மீ. தொலைவிலும், அணைக்கரையில் இருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. இந்துசமய அறநிலையத்துறையால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

## வழித்தடம்

கும்பகோணத்திலிருந்தும், ஜெயங்கொண்டத்திலிருந்தும், தா.பழூவூரிலிருந்தும், அணைகரையிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு சொக்கநாதசுவாமி திருக்கோயில்,**
கோடாலி கருப்பூர்,
உடையார் பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம்
E mail : manieo1973@gmail.com
கைபேசி : **99435 30122**





# அருள்மிகு கலியுக வரதராஜப் பெருமாள் திருக்கோயில்

### கல்லங்குறிச்சி, அரியலூர் வட்டம் மற்றும் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு கலியுக வரதராஜப்பெருமாள் |
| இறைவி | அருள்மிகு ஸ்ரீதேவி, அருள்மிகு பூதேவி |
| தீர்த்தம் | தீர்த்தவாரி கோயில் தீர்த்தம் |
| தலவிருட்சம் | மாவிலங்கை மரம் |
| ஆகமம் | வைகாசி ஆகமம் |

**தலச் சிறப்பு**

300 ஆண்டுகளுக்கு முன்பு வன்மையும், திண்மையும் உடைய வன்னியர் குலத்தில் கோபாலன் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரது குடும்பத்தினர் வைணவ வழிபாட்டில் மிகுந்த பற்றுடையவர்கள். வேங்கடவனை விரும்பி வழிபட்டு வந்தனர். கோபாலன் தனது இளமை பருவத்தில் அரியலூர் வட்டம் கல்லங்குறிச்சிக்கு அருகில் உள்ள கடுகூர் என்ற கிராமத்தில் உள்ள தாய் மாமன் வீட்டில் வளர்ந்து வந்தார்.

வாலிபர் ஆனதும் தனது சொந்த ஊரான கல்லங்குறிச்சிக்கு வந்து தனது பெற்றோர்களுடன் வாழலானார். கோபாலன் தனது தந்தையின் மறைவிற்குப் பிறகு தனது விளைநிலங்களில் வேலை செய்த பண்ணையாட்களுக்கு குடி இருக்க இலவசமாக தனது காடுகளில் இருந்து இடம் ஒதுக்கிக் கொடுத்தார். அப்படி இலவசமாக தரப்பட்ட பகுதிகள் கோபாலன் குடிக்காடு என்று அழைக்கப்பட்டது. அப்பெயர் நாளடைவில் மருவி இன்றைக்கு கோப்புலிங்கக் காடு என்று அழைக்கப்படுகிறது. கோபாலனுக்கு வெகுகாலம் குழந்தை பேறு இல்லை திருவேங்கடவனை வேண்டியதன் பலனாக நீண்ட காலத்திற்குப் பிறகு அவருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது.



கோபாலன் தன் மகனுக்கு மங்கான் என்று பெயரிட்டு வளர்த்து வந்தார். மங்கானுக்கு தக்க வயது வந்ததும் திருமணமும் முடித்து வைத்தார். மங்கான் தன் தந்தைக்கு பிறகு குடும்பப்பொறுப்பை ஏற்றார். தாளாண்மை மிக்க வேளாண்மைத் தொழிலைச் சிறப்பாக செய்து வந்தார். 100 க்கு மேற்பட்ட பசுக்களையும் வளர்த்து வந்தார். இல்லை என்று வருபவர்களுக்கு இல்லை என்று சொல்லாமல் வாரி வழங்கும் வள்ளலாகவும் திகழ்ந்தார்.

ஒரு சமயம் அவரது பாசத்துக்குரிய பசுமாடு நிறைமாதமாக கன்று போடும் நிலையில் இருந்து காணாமல் போய்விட்டது. எங்கு தே டியும் கண்டுபிடிக்க முடியவில்லை. மங்கான் மிகுந்த கவலை கொண்டார். அவர் உறங்கும் போது அவரது கனவில் அருள் வடிவான பெரியவர் தோன்றினார். கடுகூருக்கு அருகில் உள்ள நெடுங்காட்டில் கன்றுடன் நிற் கிறது ஓட்டி வருவாய் என்று கூறி மறைந்தார்.

திடுக்கிட்டு விழித்த மங்கான் உற்றவர் துணையுடன் அதிகாலையிலேயே பசுவையும் கன்றையும் தேடிப்போனார். பெருங்காட்டின் நடுவில் அனுமன் உருவம் செதுக்கப்பட்ட கம்பம் ஒன்று மண்ணில் புதைந்து இருப்பதையும் காணாமல் போன பசு தன் கன்றுடன் அந்த கம்பத்தின் மீது பால் சொரிந்து கொண்டிருப்பதையும் கண்டார். ஆனந்தம் பெருக, ஆவையும், அதன் கன்றையும் ஓட்டிக் கொண்டு வந்து விட்டார்.

சில நாட்கள் சென்றன. ஒரு நாள் மங்கான் உறங்கும் போது அவர் கனவில் முன்பு தோன்றிய அதே பெரியவர் தோன்றி அப்பனே உன் பசுவையும் கன்றையும் அந்தக் கொடுங்காட்டில் கவனிக்க ஆள் இன்றி இருக்கிறேன் ! என்னை ஏன் மறந்தாய்? என்று கேட்டு மறைந்தார்.

திடுக்கிட்ட மங்கான் தனது பணியார்களுடன் அங்கு சென்றார். மண்ணில் புதைந்து கிடந்த கம்பத்தையும் பிற பொருட்களையும் அகழ்ந்து எடுத்தார். தனது செல்வத்தைச் செலவழித்து அற்புதமான திருக்கோயிலை எழுப்பினார்.

அதுவே கல்லங்குறிச்சியில் எழுந்தருளியுள்ள அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக்கோயிலாகும்.

**வரலாற்றுச் சிறப்பு**

மங்கான் தனது உரிமைப் பொருளைக் கொண்டு பெருமாளுக்கு மூல மண்டபம், மகா மண்டபம், இன்னும் பிறவும் கட்டுவித்தார், கொடிச் சேலையும் உருவாக்கி கம்பப்பெருமாள் அருகில் வைத்து பூஜை செய்து அதன் பின் தனது வீட்டிற்கு கொண்டு போய் உரிய இடத்தில் வைத்து கம்பத்தை பெருமாளாகவே சிந்தையில் கொண்டு வீட்டிலும் பூஜை செய்து வந்தார்.

பிறகு சனிக்கழமை விஷேச நாட்கள், திருவிழா நாட்களில் கொடிச்சேலையை தனது வீட்டிலிருந்து கோயிலுக்கு கொண்டு வந்த உரிய இடத்தில் வைத்து பூஜை வழி பாடு செய்து திருவிழாக்கள் முடிந்த பின்பு வீட்டிற்கு கொண்டு போய் வைத்துக் கொள்வார். வழிவழியாக தொடர்ந்த இவ்வழக்கம் இன்றும் நடைமுறையில் உள்ளது.

சிறப்பு நாட்களில் அவர் பெருமாளுக்கு தன் நிலத்தில் நல்ல திணை கொண்டு பொங்கலிட்டு படைப்பதுண்டு. நாள்தோறும் இவர் வழிபாடு ஆற்றுவதில் சிறிதும் தவறாதவர். இறைவன்பால், தான் தந்துள்ள உறுதிமொழியினை நிறைவேற்றும் பொருட்டு வழிவழி வருவோருக்கும் இச்செய்கையை தெரிவிக்குமாறு கூறி இறைவனடி சேர்ந்தார்.

### சிற்பச் சிறப்பு

இத்திருக் கோயிலில் அக்காலத்திற்கேற்ப சிற்பங்கள் தூண்களில் வடிக்கப் பெற்று அவை இன்றளவும் பேணிக்காக்கப்பட்டு வருகிறது. திருக்கோயில் முழுவதும் கருங்கல்லாலேயே கட்டப்பட்ட எழிலார்ந்த நிலையில் காட்சி தருகிறது. நுழைவாயில் கற்தூண்களில் வாழ்க்கை நடைமுறைக்கு ஏற்ற அழகிய சிற்பங்கள் புயைப்பட்டு உள்ளன. அவைகள் இன்றளவும் மனதிற்கும், சிந்தனைக்கும், ஏற்றத ாகவும் அமையப் பட்டுள்ளன.

### இலக்கியச் சிறப்பு

ஆக்கமெல்லாம் அளித்து எம்மை ஆதரவாய் காக்கின்ற தெய்வம் கலியுகத்து எம்பெருமான். நோக்கங்கள் அனைத்தும் அளித்து நோயின்றி துன்பமின்றி தேக்கிய புகழுடன் சீர்பெற்று வாழ்வாராக என்று பெருமாளிடம் வேண்டி அர்ச்சனை ஆராதனை செய்து பெருமாள் பிரசாதம் வழங்குவதை இன்றும் வழக்கமாக கொண்டுள்ள பாங்கு இத்திருக்கோயில் நிர்வாகத்தில் தமிழை முதன்மைபடுத்தி செய் கின்ற வழிபாட்டுக்கு உதாரணமாக எடுத்துக்கொள்ளும் அளவிற்கு தாய்மொழிப்பற்றுடன் கூடிய வழிபாடு இத்திருக்கோயிலில் நடந்து வருகிறது. உற்சவருக்கு சமஸ்கிருதத்திலும் அர்ச்சனைகள் செய்யப்படுகிறது.

### தனிச்சிறப்பு

சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த தசாவதார மண்டபம் 1915-ல் கட்டப்பட்டுள்ளது. மேலும் இத்திருக்கோயிலுக்கு கிழக்கே 2 கி.மீ. தொலைவில் கடுகூர் கிராமத்தில் இத்திருக்கோயிலைச் சார்ந்த அருள்மிகு திரௌபதியம்மன் கோயில் 1914-ம் ஆண்டு கட்டப்பட்டுள்ளது.



### இதரச் சிறப்புகள்

விவசாய பெருமக்கள் அவரவர் விவசாய பயிர்களை நல்லபடியாக காபந்து பண்ண வேண்டிக் கொண்டும் அவ்வாறு வேண்டியபடி விளைப்பொருட்கள் அதிகப்படியாக மகசூல் வரப்பெற்றதும்,அதன் ஒரு பகுதியை இன்றளவும் பெருமாளுக்கு காணிக்கையாக கொண்டு வந்து அளிப்பதையும் பழக்கமாக கொண்டுள்ளனர்.

இவ்வாறாக விவசாய பெருங்குடி மக்களுக்கு உற்ற துணையாக உலகளந்த பெருமாள் எம்பெருமான் அருள்மிகு கலியுக வரதராஜப்பெருமாள் அருளாட்சி செய்து வருவது இத்திருக்கோயிலின் சிறப்பாகும். ஆடு, மாடுகள் மற்றும் நவதானியங்களை பெருமளவில் காணிக்கையாக வழங்குகின்றனர். பக்தர்கள் கண்டு களிக்க மான்களும், மயில்களும் கோயிலில் வளர்த்து வரப்படுகின்றன.

இத்திருக்கோயிலுக்கு வழிவழி வந்த திரு.கோ.கோவிந்தசாமி அவர்கள் பரம்பரை தருமகர்த்தவாக இருந்து செம்மையுடன் செயல்புரிந்து வருகின்றனர்.

### திருவிழாக்கள்

ஆண்டுதோறும் ஸ்ரீராமநவமி யன்று (பங்குனி அமாவாசைக்குப் பிறகு ஓன்பதாம் நாள்) கொடியேற்றத்துடன் பெருந்திருவிழா துவங்கி பத்துநாட்கள் நடைபெறும்.

இப்பெருந்திருவிழா நடக்கும் பத்து நாட்களிலும் சிறப்பாக பக்திச் சொற்பொழிவுகள், கதா காலாட்சேபங்கள், இன்னிசை நிகழ்ச்சிகள் , நாதஸ்வர கச்சேரிகள், பியாண்டு வாத்தியம், பொம்மலாட்டம், வில்லிசை, பொய்க்கால் குதிரை, கரகாட்டம், வாணவேடிக்கை ஆகியவை யாவரும் கண்டு பேருவகை கொள்ளும் வண்ணம் மிகச்சிறப்பாக நடத்தப்பட்டுவருகிறது.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.30 மணிமுதல் பகல் 12.30 மணி வரை**
**மாலை 3.00 மணி முதல் இரவு 9.00 மணி வரை**
**சனிக்கிழமைகளில் காலை 6.00 மணி முதல்**
**இரவு 9.00 மணி வரை நடைதிறந்திருக்கும்.**

### பூஜா காலங்கள்

இத்திருக்கோயிலில் தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெற்றுவருகின்றன.

| | |
|---|---|
| காலைசந்தி | காலை மணி 7.00 |
| உச்சிகாலம் | பகல் மணி 12.00 |
| சாயரட்சை | மாலை மணி 6.00 |
| அர்த்த சாமம் | இரவு மணி 9.00 |

**அமைவிடம்**

இத்திருக்கோயில் அரியலூர் நகர புகை வணடி நிலையத்தி;ல இருந்து 7 கி.மீ. தூரத்திலும், ஜெயங்கொண்டத்தில் இருந்து 42 கி.மீ தூரத்திலும், திருச்சியிலிருந்து 70 கி.மீ. தூரத்திலும் தஞ்சாவூரிலிருந்து 49 கி.மீ. தூரத்திலும் பெரம்பலூரில் இருந்து 34 கி.மீ. தூரத்திலும் அமைந்துள்ளது.

**வழித்தடம்**

மற்படி ஊர்களில் இருந்து அரியலூருக்கு பேருந்து வசதிகள் உள்ளன. அரியலூரில் இருந்து நகரப்பேருந்து மற்றும் சிறிய பேருந்து வசதிகளும் உள்ளன. அரியலூர் பேருந்து நிலையத்தில் இருந்து ஆட்டோ வசதிகள் உள்ளன.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு கலியுகவரதராஜப்பெருமாள் திருக்கோயில்**
கல்லங்குறிச்சி, அரியலூர் வட்டம்
தொலைபேசி எண் **04329 228890**





# அருள்மிகு கோதண்டராமசுவாமி திருக்கோயில்

## அரியலூர் நகர் மற்றும் வட்டம், அரியலூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு சீனிவாச பெருமாள் (எ) அருள்மிகு கோதண்டராமசுவாமி |
| இறைவி | அருள்மிகு அலமேலு மங்கை |
| தீர்த்தம் | அலமேலு மங்கை புஷ்பகரணி தீர்த்தம் |
| தலவிருட்சம் | வில்வம் |
| ஆகமம் | வைகானச ஆகமம் |

**தலச்சிறப்பு**

இத்திருக்கோயில் தசஅவதார மண்டபத்தில் உள்ள தூண்களில் பெருமாளின் தசஅவதாரங்களுக்கு தனித்தனியே சிற்பங்கள் வடி வமைக்கப்பட்டுள்ளது.

**வரலாற்றுச் சிறப்பு**

இத்திருக்கோயில் நுழைவாயில் அருகில் கருடர் சன்னதியும், துவஜஸ்தம்பமும் அமைக்கபட்டுள்ளன. தேர் வடிவில் கோவிலை அமைத்து அதை குதிரைகள் பூட்டி இழுப்பது போன்ற ரத கோயில்கள் முதலாம் குலோத்துங்க சோழனின் காலத்திற்குரியவை. அதேபாணியில் இக்கோயிலும் கட்டப்பட்டிருக்கலாம் என்பதை தசஅவதார அமைப்பில் இருந்து அறிய முடிகிறது. சோழர் காலத்து உருண்டையான ஆறு தூண்கள் இன்றும் இத்திருக்கோயிலில் உள்ளன. இவை அனைத்தும் இத்திருக்கோயிலில் சோழர் கால்ததில் புதுப் பிக்கப்பட்டு கட்டப்பட்டிருப்பதை உறுதி செய் கிறது. இத்திருக்கோயில் கி.பி.6-ம் நூற்றாண்டு, பல்லவர் காலம், இதை உறுதிப்படுத்தும் விதமாக பல்லவர் கால பாணியில் அமைந்த இரண்டு சிங்க முக தூண்கள் அமைந்துள்ளன. பல்லவர் கால கோயில் பிற்காலத்தில் சிதிலம் அடைந்து சோழர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்கலாம் என தெரியவருகிறது.

### சிற்பச் சிறப்பு

இத்திருக்கோயில் ஐந்து நிலை ராஜகோபுரம் நாயக்கர் கால கலைப்பாணியில் நிறுவப்பட்டுள்ளது.

### திருவிழாக்கள்

ஸ்ரீ வைகுண்ட ஏகாதசி உற்சவம், மாதாந்திர ஏகாதசி, தமிழ் வருடப்பிறப்பு, ஆங்கில வருடப்பிறப்பு, புரட்டாசி சனிக்கிழமைகள், ஆண்டாள் திருக்கல்யாண வைபவ நிகழ்ச்சி ஆகியவைசிறப்பாக நடைபெறுகின்றன.

### இதரச்சிறப்புகள்

இத்திருக்கோயில் பிரார்த்தனை தலமாக உள்ளதால் இங்குஅனைத்து முகூர்த்த நாட்களிலும் திருமணங்கள் நடைபெறுகின்றன. திருமணங்கள் நடைபெறும் திருக்கல்யாண ஷேத்தரமாக இத்திருக்கோயில் விளங்கி வருகிறது. இத்திருக்கோயிலில் திருமணம் நடைபெறும் தம்பதியினர் அனைவருக்கும் அனைத்து செல்வங்களும் கிடைப்பதாக இப்பகுதி மக்களால் நம்பப்பட்டு அருள்மிகு கோதண்டராமரே அருள்மிகு கல்யாணராமராக அருள்பாலிக்கும் நிலையை அனைத்து பக்தர்களும்ஆத்மார்த்தமாக உணர்கின்றனர். இத்திருக் கோயிலில் கி.பி.1557, 1635, 1730, 1742 ஆகிய ஆண்டுகளில் எழுதப்பட்ட முக்கிய கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

**நடைதிறக்கும் நேரம்**
**காலை 6.30 மணிமுதல் பகல் 12.00 மணி வரை**
**மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை**

### பூஜாகாலங்கள்

காலை, மாலை இருகால பூஜை, ஸ்ரீரங்கம் அருள்மிகு ரெங்கநாதர் கோவிலில் நடைபெறும் பூஜைகள் சம்பிரதாயங்கள் அனைத்தும் இத்திருக்கோயிலில் பின்பற்றப்படுகின்றன.

### அமைவிடம்

அரியலூர் புகை வண்டி நிலையத்தில் இருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவிலும், தஞ்சாவூரில் இருந்து 44 கிலோ மீட்டர் தொலைவிலும், திருச்சியிலிருந்து 75 கிலோமீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது.

### வழித்தடம்

தஞ்சாவூரிலிருந்தும், திருச்சியிலிருந்தும், பெரம்பலூரிலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.







தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு சீனிவாச பெருமாள்**
**அருள்மிகு கோதண்டராமசுவாமி திருக்கோயில்**
அரியலூர் நகர் மற்றும் வட்டம், அரியலூர் மாவட்டம்.
கைபேசி எண் : **98940 35312**

### பஞ்ச கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரங்கள்

1. திருக்கோவிலூர்
2. திருக்கண்ணங்குடி
3. திருக்கபித்தலம்
4. திருக்கண்ணபுரம்
5. திருகண்ணமங்கை



# அருள்மிகு பயறணீசுவரசுவாமி திருக்கோயில்

உடையார் பாளையம் நகர் & வட்டம், அரியலூர் மாவட்டம்

| | |
|---|---|
| இறைவன் | அருள்மிகு பயறணீசுவரசுவாமி |
| இறைவி | அருள்மிகு நறுமலர் பூங்குழல் நாயகி |
| தீர்த்தம் | தீர்த்தம் காண்டீப தீர்த்தம் (வில் வடிவ தீர்த்தம்) |
| தலவிருட்சம் | மகிழ மரம் |
| ஆகமம் | காமிக ஆகமம் |

### தல வரலாறு

முன்னொரு காலத்தில் மிளகு வியாபாரி ஒருவன் வண்டிகளில் மூட்டை, மூட்டையாக மிளகு ஏற்றிக்கொண்டு திருமுதுகுன்றம் (விருத்தாச்சலம்) சந்தையில் விற்பனைக்காக முற்கபுரி எனும் உடையார்பாளையம் வழியாக சென்றுகொண்டு இருந்தான். அப்போது இந்த ஊரில் சுங்கச் சாவடி அதிகாரிகள் என்னவென்று கேட்க அவன் சாமியை சாட்சியாக வைத்து இவையெல்லாம் பயறு வகைகள் என்று பொய் சொல்லிவிடுகிறான். (காரணம் மிளகிற்கு சுங்க வரி அதிகம் என்பதால்) அதிகாரிகளும் சரியென்று விட்டுவிட அவன் சந்தோசமாக சந்தையில் விற்பனை செய்யச் சென்று விடுகிறான். அங்கே சந்தையில் மூட்டைகளை அவிழ்த்து பார்க்கும்போது அவைகள் எல்லாம்பயறு மூட்டைகளாக மாறியிருப்பதை கண்டு அதிர்ச்சி அடைகிறான். அப்போது ஓர் அசரீரி நீ இதை மாற்றிச் சொல்லிய இடத்திலேயே சென்று மாற்று என உத்திரவிட அவன் மீண்டும் முற்கபுரி வந்து சுவாமியை வேண்டிக்கொள்ள பயறு வகைகள் எல்லாம் மீண்டும் மிளகாகவே மாறியது. எனவே தான் மிளகை பயறாக மாற்றிய இறைவன் பயரணீசுவரர் என நாமதேயம் பெற்றார். அம்பாள் நறுமலர் பூங்குழல் நாயகி.



இத்திருத்தலத்தில் உள்ள நவக்கிரகங்கள் யாவும் அவற்றிற்குரிய மண்டலங்கள் அமைத்து அதில் ஸ்தாபிதம் செய்யபட்டுள்ளதால் இது நவக்கிரக பரிகார ஸ்தலமாக உள்ளது. ஆலயத்தில் நடைபெறும் பிரதோவி ழாவில் கலந்துகொண்டு ஆலயம் வலம் வந்தால் திருமண தடைகள் நீங்கி விரைவில் திருமணம் நடைபெறும். மேலும் பவுர்ணமி அன்று திருக்கோயில் திருவலம் (கிரிவலம்) ஆலயம் மற்றும் காண்டீப தீர்த்தகுளம் சேர்த்து வலம் செய்வதால், கைலாயம் மற்றும் கங்கையை சேர்த்து வலம் செய்த பலன் கிடைக்கும் என்பது ஐதீகம்.

இத்திருக்கோயில் கி.பி.16-ம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பழமை வாய்ந்த புராதனமிக்க திருக்கோயிலாகும்.

### தனிச்சிறப்பு

மகாபாரத காலத்தில் பஞ்சபாண்டவர்கள் வனவாசத்தில் இருந்தபோது முற்கபுரி என்கின்ற உடையார்பாளையத்தில் தங்கியிருந்தனர். அப்போது அவர்கள் நீர் இல்லாமல் கஷ்டப்பட நேரிட்டது. அதற்கு அவர்கள் விநாயகப் பெருமானை வேண்டி நின்றனர். விநாயகர் பெருமான் அர்ச்சுனனுடைய காண்டீபவில்லை வளைத்து அந்த இடத்தில் ஏரியை ஏற்படுத்தினர். அவ்வாறு வில்லை வளைத்த நிலையிலேயே ஆலய வாசலில் வில்வளைத்த விநாயகராக கோவில் கொண்டுள்ளார்.

அகத்திய முனிவர் இந்த ஆலய ஈசனை நோக்கி தவம் செய்த நிலையில் அமர்ந்திருக்க இந்த ஏரியில் இருந்த தவளைகள் எல்லாம் சத்தம் செய்து இடையூறு செய்துகொண்டிருந்தன. கோபம் கொண்ட முனிவர் இனி இந்த ஏரியில் தவளைகள் சத்தம் செய்யக்கூடாது என சாப மிட்டார். அன்றிலிருந்து இந்த ஏரியில் உள்ள தவளைகள் சத்தம் எழுப்புவது இல்லை.

### திருவிழாக்கள்

சித்திரை வருடபிறப்பு, மாதாந்திர கார்த்திகை, பிரதோஷம், வைகாசி விசாகம், ஆனித்திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, விஜயதசமி, தீபாவளி, அன்னாபிஷேகம், கார்த்திகை தீபம், கார்த்திகை சோமவாரம், சங்காபிஷேகம், மார்கழி திருவாதிரை, பொங்கல், தைபூசம், மாசிமகம், மார்கழி திருவாதிரை, பொங்கல், தைபூசம்,மாசிமகம், மகா சிவராத்திரி, பங்குனி உத்திரம் ஆகியன இத்திருக்கோயிலில் நடைபெறும் திருவிழாக்கள் ஆகும்.



நடைதிறக்கும் நேரம்
காலை 8.00 மணிமுதல் பகல் 10.00 மணி வரை
மாலை 5.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

### பூஜா காலங்கள்

காமிக ஆகம விதிப்படி தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெறுகின்றன.

| | |
|---|---|
| காலைசந்தி | காலை 8.30 மணி |
| சாயரட்சை | மாலை 6.00 மணி |

### அமைவிடம்

அரியலூர் - ஜெயங்கொண்டம் செல்லும் சாலையில் அரியலூரில் இருந்து 28 கி.மீ தொலைவிலும், ஜெயங்கொண்டத்திலிருந்து 8 கி.மீ தொலைவிலும் உடையார்பாளையம் நகரின் மையத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### வழித்தடம்

அரியலூரிலிருந்ததும், ஜெயங்கொண்டத்திலிருந்தும் பேருந்து வசதிகள் உள்ளன.


தொடர்பு முகவரி
பரம்பரை அறங்காவலர்
**அருள்மிகு பயறணீசுவர சுவாமி திருக்கோயில்**
உடையார்பாளையம் நகர் & வட்டம்,
அரியலூர் மாவட்டம்.
அலைபேசி : **97914 64738**
அர்ச்சகர் அலைபேசி : **94439 53252**

















# திங்கள் இதழை வாங்கி படியுங்கள்

## சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| தனி இதழின் விலை | ரூ. | 15.00 |
| ஓராண்டுச் சந்தா | ரூ. | 180.00 |
| ஐந்தாண்டுச் சந்தா | ரூ. | 900.00 |
| பத்து ஆண்டுச் சந்தா | ரூ. | 1800.00 |
| ஆயுட்காலச் சந்தா | ரூ. | 2700.00 |

(ஆயுட்காலம் என்பது
அதிக பட்சமாக 15 ஆண்டுகள் மட்டும்)

இதற்கான பணவிடையை / வங்கி வரைவோலையை
Commissioner, HR & CE Dept., Chennai-34
என்ற முகவரிக்கு அனுப்பவும்.

# மாண்புமிகு **தமிழக முதல்வர் அம்மா** அவர்கள்

## அறிவித்த அன்னதான திட்டத்தின்படி
## அரியலூர் மாவட்டத்தில் அன்னதானம் நடைபெறும்
## திருக்கோயில்கள் விபரம்

| வ. எண் | திருக்கோயில் பெயர் மற்றும் முகவரி | நாள் 1– க்கு பயயாளிகள் | நாள் 1 –க்கு உபயதாரர் திட்டநிதி | தொடர்பிற்கு |
|---|---|---|---|---|
| 1. | அ/மி கலியுகவரதராஜப்பெருமாள் திருக்கோயில், கல்லங்குச்சி அரியலூர் வட்டம் & மாவட்டம் | 100 | 2000 | 04329–228890 |
| 2. | அ/மி கோதண்டராமசுவாமி திருக்கோயில், அரியலூர் வட்டம் & மாவட்டம் | 50 | 1000 | 98940 35312 |
| 3. | அ/மி வைத்தியநாதசுவாமி திருக்கோயில், திருமழபாடி, அரியலூர் வட்டம் & மாவட்டம் | 25 | 500 | 99435 30122 |

அன்னதான திட்டத்தில் அன்னதான திட்ட நன்கொடை வைப்பு நிதி

நாள் 1 – க்கு 100 நபர்களுக்கு ரூ. 25,000/– மும்

நாள் 1 – க்கு 50 நபர்களுக்கு ரூ. 15,000/– மும்

நாள் 1 – க்கு 25 நபர்களுக்கு ரூ. 10,000/– மும்

செலுத்தினால் உபயதாரர்கள் குறிப்பிடும் நாளில் அத்திருக்கோயில்களில் அன்னதானம் வழங்கப்படும். மேலும் அன்னதான நன்கொடை செலுத்துபவர்களுக்கு வருமானவரிச் சட்டம் **80 (G)**– ன் கீழ் வருமான வரி விலக்கும் உள்ளது.


ARIYALUR
DISTRICT
N
Andimadam
Perambalur
Ponparappi
Kallattur
Sendurai
Meenjsurutti
Jayankondam
Gangai Konda
Cholapuram
Kuruvallapar
Theeyanur
Sennivanam
Udayar palayam
Kodali
karuppur
Kalenkurichi
ARIYALUR
Vikra
Mangalam
Pazhavur
Nagapattinam
Kizhpalur
Kollidam
Kamarasavalli
Thanjavur
Tirumanur
Thirumazhapadi
Map not to Scale
LEGEND
Major Road
Railway
District Boundary
State Boundary
River
District HQ
Other Town
Major Town